
எல்லா
வேலையும்
என்
தலையிலே!
எல்லா வேலையும் நானே செய்ய
வேண்டும் என்று எதிர்பார்த்தார்கள்...
எனக்கோ ஒரே சோர்வு. குழந்தைகள்,
சமையல், வீட்டுவேலை
எல்லாவற்றையும் எப்படி
நானே சமாளிக்க முடியும்...
என் கணவர் ஒரு நாள்
ஹார்லிக்ஸ் வாங்கி
வந்தார். ஹார்லிக்ஸ்
பருகினால் இழந்த
சக்தியை மீண்டும்
பெறலாம் என்றார்!
Horlicks
இப்பொழுது
என்னைப்
பாருங்கள்!
திட
ஆரோக்கியத்
துடன் தெம்பும்
சுறுசுறுப்புமாய்
இருக்கிறேன்.
எல்லாம் ஹார்லிக்ஸ்
செய்த நன்மை!
Horlicks
போஷாக்குக் குறைவினால்
ஏற்படும் சோர்வும்
தளர்ச்சியும் நீங்க
ஹார்லிக்ஸ் பருகும்படி
டாக்டர்கள் சிபாரிசு
செய்கிறார்கள். ஆடை
சத்து மிகுந்த பால்,
கோதுமை மாவு,
மால்ட்டட் பார்லி இவற்றின்
போஷாக்குச் சத்துக்களை
ஒருங்கே கொண்ட
ஹார்லிக்ஸ் இழந்த
சக்தியை மீண்டும் பெற
உதவுகிறது என்பது
டாக்டர்களுக்குத்
தெரியும்.
ஹார்லிக்ஸ்
அதிக சக்தி
யளிக்கிறது!

# கல்கி

**நினைவுத் திரையில்...**



"டேய், நீதானேடா இப்போ இரைச்சல் போட்டு என். எஸ். கிருஷ்ணன் பாட்டு பாடிண்டிருந்தே ?"

"இல்லேங்க, ஸார்! நெஜம்மா!"

"பொய் சொல்லித் தப்பிச்சுக்கலாம்னு பார்த்தியா. அதெல்லாம் இங்கே நடக்காது. அந்தப் பாட்டை இன்னும் இரண்டு தடவை பாடு!"

கல்கி - 1941, ஆகஸ்டு 1

## பொருளடக்கம்

பராபவ சித்திரை 18 ※ மே 1



"கல்கி"யில் வெளிவரும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.




பிசாசு ஓட்டும் படலம்!

தகர்க்கும் குண்டு

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

மலர் 25 ● இதழ் 40



# சர்க்கரை தரும் பாடங்கள்

ஓர் இனிப்பான செய்தி.

சென்னை ராஜ்யத்தில் இனி சர்க்கரைக்கு ரேஷன் கட்டுப்பாடு கிடையாது. சர்க்கரை என்பதால் இனிப்பான செய்தி என்று கூறுகிறேமோ என்று நேயர்கள் நினைக்கலாம். அதற்காகச் சொல்லவில்லை. ஏதோ ஒரு பொருளின் மீதிருந்த கட்டுப்பாடு நீங்கியதே என்பதுதான் அசசெய்தியிலுள்ள இனிமை!

சுதந்திரக் கட்சி கோரி வந்த கண்ட்ரோல் ஒழிப்பு — சர்க்கரை விஷயத்திலாகிலும் ஏற்பட்டதே என்பதுதான் மகிழ்ச்சி தரும் விஷயம்.

சர்க்கரை ரேஷன் அமுல் செய்ததில் எத்தனையோ குளறுபடிகள். பத்துப் பேர் உள்ள குடும்பத் தலைவரின் வருவாய் நூற்றைம்பது ரூபாயாக இருக்கும். அந்தக் குடும்பத்துக்கு மாதத்துக்கு இரண்டு கிலோதான் வழங்கி வந்தார்கள். இரண்டே பேர் உள்ள குடும்பத்துத் தலைவரின் வருவாய் அறுநூறு ரூபாயாக இருந்தால் பதினறு கிலோ வழங்குவார்கள். இப்படித் தேவைப்பட்டவர்களுக்குக் குறைவாகவும், தேவையற்றவர்களுக்கு அதிகமாகவும் வழங்கி, அதையொட்டி எத்தனையோ பொய், பித்தலாட்டம், தில்லுமுல்லுகள் நடந்து வந்தன. இப்போது அவை யெல்லாம் நிற்கும். அவரவர்க்குத் தேவையானதை வாங்கிக் கொள்ளலாம். பின்னல் கிடைக்காமற் போய் விடுமோ என்ற கவலையில் கடன்பட்டு, கறுப்பு மார்க்கெட் விலை கொடுத்துச் சேமிக்க வேண்டியதில்லை. நாட்டில் வேண்டிய அளவு சர்க்கரை இருக்கிறது என்று அரசாங்கம் கூறுகிறது. இந்த வருஷத்திய சர்க்கரை உற்பத்தி 34.7 லட்சம் டன். வெளிநாடுகளுக்கு நாம் ஏற்றுமதி செய்வது, உள்நாட்டுத் தேவை, இவை யெல்லாம் போக ஏழு லட்சம் டன் உபரியாகக் கையிருப்பில் இருக்கும்! எந்த வருஷத்தையும் விட அதிகபட்சமான சர்க்கரை உற்பத்தி இந்த ஆண்டு ஏற்பட்டுள்ளது!

இந்த நிலையிலிருந்து இரண்டு முக்கியமான பாடங்கள் பொதுமக்கள் தெரிந்து கொள்ளக் கிடைக்கின்றன!

அதாவது சர்க்கரை உற்பத்தி இவ்வளவு அபரிமிதமாக இருந்தும் மத்திய சர்க்கார், சர்க்கரைக் கண்ட்ரோலையும் விலைக் கட்டுப்பாடுகளையும் நீக்க மறுக்கிறது. ஏனெனில், வடநாட்டிலும், உத்தரப் பிரதேசத்திலும் விளையும் மட்டரகமான சர்க்கரை விலை குறைந்து போகக் கூடும். மார்க்கெட்டில் இந்தச் சர்க்கரையைக் குறைந்த விலைக்குத்தான் கேட்பார்கள். ஆகவே, உத்தரப் பிரதேச ஆலை முதலாளிகளின் வருவாயை உறுதி செய்வதற்காக மத்திய காங்கிரஸ் அரசாங்கம் கண்ட்ரோலை எடுக்க மறுக்கிறது. ஏழை மக்கள் வாங்கும் உணவுப் பொருள்களின் விலை ஏற்றத்தைக் குறைப்பதாகக் கூறும் காங்கிரஸ் சோஷலிஸத்தின் இலட்சணம் இது!

காங்கிரஸ் ஆட்சி தனது உருப்படாத திட்டங்களுக்காகச் செலவழிக்கும் அந்நியச் செலாவணியைச் சம்பாதிக்க வேண்டி யிருக்கிறது. அப்படி அந்நியச் செலாவணி சம்பாதிக்கும் பொருள் சர்க்கரை. வெளிநாடுகளில் உலக மார்க்கெட் விலைக்கு நாமும் சர்க்கரை விற்க வேண்டுமாயின் நமது உற்பத்தி விலையைவிடக் குறைந்த விலைக்கு வெளிநாடுகளில் விற்க வேண்டியிருக்கிறது. இப்படி வெளிநாட்டில் ஏற்பட்ட நஷ்டத்தை ஈடு கட்ட, இந்திய ஆலை முதலாளிகளுக்குக் கணிசமான லாபம் தேடித் தர உள்நாட்டில் சர்க்கரைக்கு மிக உயர்ந்த விலை நிர்ணயித்து விற்கச் செய்கிறது நமது சர்க்கார். இது தான் கண்ட்ரோல்களின் ரகசியம்!

ஆனல் பேசுவது என்ன? நாட்டில் கிடைக்கும் பொருளை எல்லாருக்கும் சமமாகக் கிடைக்கச் செய்யவே, கண்ட்ரோல்கள் என்கின்றனர்!

மற்றொரு விஷயம். சர்க்கரைக்கு மூலப் பொருள் கரும்பு. கரும்பு நல்ல நன்செய்ப் பயிர். பெருமளவு தண்ணீர் வசதியுள்ள நன்செய் வயல்களில்தான் கரும்புச் சாகுபடி செய்ய முடியும்! ஆனல் மழையின்மையால் வறட்சி ஏற்பட்டு உணவு தானியம் விளையவில்லை

என்று சர்க்கார் பெரும் ஓலம் எழுப்பி உலகி லுள்ள அத்தனை நாடுகளையும் கோதுமை யும் அரிசியும் அனுப்பச் செய்திருக்கும் இச்சமயத்தில் கரும்பு உற்பத்தி உயர்ந்திருக் கிறது! சர்க்கார் கூறியபடி உண்மையில் நாட்டில் அவ்வளவு கடுமையான வறட்சி இருந்திருக்குமானால், கரும்புச் சாகுபடியையும் அது பாதித்து இருக்க வேண்டுமல்லவா? ஆனால் இந்த ஆண்டுதான் சர்க்கரை உற் பத்தி எந்த வருடமும் இல்லாத உயர்ந்த பட்ச உற்பத்திப் புள்ளியைத் தொட்டிருக் கிறது! நில உச்ச வரம்புச் சட்டங்கள் நெல் கோதுமை விளைச்சலைப் பாழ்படுத்தி, அந்த நிலங்களையும் கரும்புச் சாகுபடிக்குத் திருப்பி யிருப்பதை இப்போது நன்றாக உணர்கிறோம். சர்க்காரின் நிலக் கொள்கையாலேயே அரிசி உற்பத்தி குறைந்து சர்க்கரை உற்பத்தி பெருகி யிருக்கிறது.

ஆனால் காங்கிரஸோ தன் கொள்கைத் தப்பிதங்களை மூடி மறைத்துப் பாரத நாட்டு ஏழை மக்களுக்காகப் பரிந்து பேசி விட்டாலே போதுமென்று நினைக்கிறது. எத்தனை நாட்கள் நம் மக்கள் இந்தப் பசப்பு வார்த்தைகளை நம்பி வாழப்போகிறார்களோ?

# உலக பாங்கின் அறிக்கை

அமெரிக்காவிடமிருந்து நான்காவது திட்டத்துக்கு உதவி பெற்று வர அங்கு இந்திய சர்க்காரின் திட்ட மந்திரி திரு அசோக் மேதா சென்றிருக்கிறார். இதே சமயத்தில் நமது நாட்டில் கண்ட்ரோல்கள் செயல்படும் அழகைப் பரிசீலனை செய்த உலக பாங்கின் குழு, கண்ட்ரோல்களினால் இந்தியப் பொருளாதாரத்துக்கு எந்த விதமான உருப்படியான பயனும் ஏற்படவில்லை என்று அறிக்கை வெளியிட்டிருக்கிறது. அதுமட்டுமல்ல. கண்ட்ரோல்களை நீக்க வேண்டுமென்றும் சிபாரிசு செய்திருக்கிறது.

உலக பாங்க் எந்தத் தனி ஒரு நாட்டையும் சேர்ந்த ஸ்தாபனமல்ல. பல நாடுகளைச் சேர்ந்த ஸ்தாபனம். பட்சபாதம் இல்லாமல் நடுநிலையிலிருந்து தனது அபிப்பிராயத்தைக் கூறுகிறது. எனவே அதன் கருத்துக்கு மிகுந்த மதிப்பு அளிக்க வேண்டும். அதிலும் உலக பாங்கினிடம் கடன் உதவி பெற முயலும் போது அது கூறும் யோசனைகளையும் கேட்க வேண்டியது நியாயந்தானே!

உலக பாங்க் ஏதோ புதிதாகக் கண்டு பிடித்துச் சொல்லிவிடவில்லை. சென்ற ஏழு ஆண்டுகளாக இவ்வளவு பணத்தை வாரி இறைத்தும் நமது பொருளாதாரம் முன்னேறாததற்குக் காரணம் இந்தக் கண்ட்ரோல் முறைதான் என்பதை நாம் படித்துப் படித்துச் சொல்லி வந்திருக்கிறோம்.

யாராகிலும் தொழில் தொடங்க முதலீடு செய்வதாக இருந்தால் அதற்காக அரசாங்கத்துக்கு லைசென்சுக்கு எழுத வேண்டும். அரசாங்கம் அர்த்தமில்லாத கேள்விகள் கேட்டு ஏதோ சாக்குச் சொல்லி நிராகரித்து விடும். அல்லது அர்த்தமற்ற காலதாமதம் செய்யும். இது இந்தியாவில் நடைமுறைப் பழக்கம். ஒரு தொழிலைத் தொடங்க அனுமதிக்கலாமா என்று பரிசீலனை செய்து நிர்மானிப்பதற்கு ஏற்ற யோக்கியதாம்சங்களை மத்திய சர்க்காரின் அதிகார வர்க்கம் பெற்றிருக்கவில்லை என்று உலக பாங்கின் அறிக்கை கூறுகிறது. நமது அரசாங்கத்தின் நிர்வாகத் திறமைக் குறைவுக்கு இதை விடக் கடுமையான அத்தாட்சிப் பத்திரம் வேறு இருக்க முடியாது.

கண்ட்ரோல் — லைசென்ஸ் முறையில் நிலவும் நிர்வாக ஊழலை மிக வன்மையாக எடுத்துக் கூறும் உலக பாங்க், அதனுள் அமைந்துள்ள அரசியல் பட்சபாதங்களையும் சுயநலக் காரியங்களையும் பற்றிக் குறிப்பிட வில்லை. இவையோ நாமே நன்கு அறிந்த உண்மைகள்!

காங்கிரஸின் பொய்யான சோஷலிஸ திட்டங்கள் காரணமாக ஒவ்வோர் இந்தியனையும் அவமானம் கொள்ளச் செய்யும் இத்தகைய அறிக்கை உலக பாங்கியினிடமிருந்து வெளிவந்திருக்கிறது!

## அருணகிரிநாதர் பிரதிஷ்டை

சென்னை அமைந்தகரைக்கு மேற்கே இரண்டு மைலில் உள்ள கோயம்பேட்டில், பூந்தமல்லி நெடுஞ்சாலையை ஒட்டி அமைந்திருக்கும் ஸ்ரீ குசலவபுரீசுவரர் ஆலயம் புராணப் பிரசித்தியும் சரித்திரப் புகழும் வாய்ந்தது. இவ்வாலயத்தில் எழுந்தருளியிருக்கும் கந்தவேளுக்கு அருணகிரிநாதர் தமது செஞ்சொல் மாலைகளை அணிவித்திருக்கிறார். திருப்புகழ் பெற்ற குமரனின் சந்நிதியில் திருப்புகழ் தந்த திரு அருணை முனிவரின் சிலா விக்கிரகத்தைப் பிரதிஷ்டை செய்ய அன்பர்கள் முன்வந்திருக்கின்றனர். மே மாதம் இரண்டாம் தேதி காலை 10–30 மணிக்கு மேல் 11 மணிக்குள் கோயம்பேடு ஆலயத்தில் அருணகிரிநாதரின் திருஉருவச் சிலை பிரதிஷ்டை செய்யப் படுகிறது. முருகனிடமும் தமிழிடமும் அன்பு பூண்டவர்கள் யாவரும் இவ்விழாவில் பங்கு பற்றித் திருஅருள் பெற வேணும்.

★

அஸ்ஸாம் ரயிலில் ஏப்ரல் 21ந் தேதி நடந்த வெடி விபத்து காரணமாக ஐம்பத்தைந்து உயிர்களை இழந்திருக்கிறோம். சர்க்காரின் கொள்கைகள் காரணமாக, சமாதானம் செய்துகொள்ள முடியாத விரோதிகளைச் சுற்றிலும் நாம் பெற்று வருவதையே இது உணர்த்துகிறது. விடுதலைப் போராட்ட நாட்களில் உள்நாட்டிலிருந்த பயங்கரவாதிகளைப் பிரிட்டிஷ் சர்க்கார் வன்மையுடன் அடக்கியது உண்மை. ஆயினும் எல்லைப்புறத்தில் உள்ள மக்களை ஆங்கில ஆட்சியாளர் சமரஸ முறையிலேயே நடத்தி வந்தார்கள். ஏனெனில் எல்லைப்புற மக்களின் நட்பை இழப்பதால் அந்நிய அபாயம் பெருகும் என்று அவர்கள் உணர்ந்திருந்தனர்.

ரயில் விபத்துக்காளானவர்களின் எண்ணிக்கையைக் கேட்டு நம் பார்லிமெண்ட் அங்கத்தினர் கோபம் கொண்டனர் என்று செய்தி வந்துள்ளது. கோபப்படுவது இயற்கையாயினும், இது தெளிவான சிந்தனைக்கு உதவாது.

★

வகுப்புவாத மனப்பான்மையுள்ள அரசியல்வாதிகள் கூட்டம் கூட்டமாக மக்களைப் பொய் சொல்ல வைப்பதால் விசித்திரமான விளைவுகள் ஏற்படுகின்றன. சீக்கிய அரசியல்வாதிகளை எதிர்த்தவர்கள் முன்பு பஞ்சாபில் ஹிந்தியர்கள் அதிகம் என்று காட்ட விரும்பியபோது பஞ்சாபியரில் பலரையே (1961ம் வருஷத்திய ஜனசங்கியையின்போது) தங்கள் தாய்மொழி ஹிந்தி என்று பொய் சொல்லுமாறு செய்தனர். இப்போது பஞ்சாபி சுபா என்று ஒன்று ஏற்படவிருப்பதால் நிலைமை தலைகீழாகியுள்ளது. பஞ்சாபி மொழியினர் இப்போது உண்மையைச் சொல்ல வேண்டியிருக்கிறது. போலி ஹிந்தியருக்கு உண்மையைச் சொல்லும் இயற்கையான உரிமையை இப்போது காங்கிரஸார் அளித்திருப்பதாகத் தெரிகிறது.

மொழியின் பெயரை வைத்துக் கொண்டு வகுப்புவாத அரசியலை நடத்துவது சிக்கலான காரியம். வகுப்புப் பிரிவினைகள் இருக்கக் கூடாதென்பது அரசியல்வாதிகளின் கொள்கை. எனவே வகுப்புப் பிரிவினைகளைக் காணுமல் கண் மூடிக்கொள்ள விரும்புகிறார்கள். ஆனால் மக்கள் இந்தப் பிரிவினையை இன்னும் விடவில்லை. இச்சந்தர்ப்பத்தில் தான் அரசியல்வாதிகள் மொழி என்கிற தெய்வத்தின் முன்னுள்ள பலி பீடத்தில் சத்தியத்தைக் கொலை செய்ய முற்படுகின்றனர். இந்தக் கோணல் வழி கோணலான விளைவுகளில் கொண்டு விடுகிறது.

யதார்த்தத்தை மறந்து ஒரு பொய்யான அஸ்திவாரத்தின் மீது கட்டிடத்தை எழுப்ப முடியாது. சத்தியமேவ ஜயதே. தாராசிங்—ஸந்த் ஃபதே சிங் இருவரும் சந்தித்து, சிநேகப்பான்மையுடன் சத்தியத்துக்கு முதலிடம் தந்து முடிவுகள் காணுமாறு செய்தால்தான் பிரச்னைக்குத் திருப்திகரமான தீர்வு ஏற்படும். தனிப்பட்ட முறையில் சத்தியம் உயர்ந்தது என்பதோடு மட்டுமின்றி சமயோசிதத்துக்குக்கூட அதுவே பயனுகிறது! சத்தியத்தில் நமக்குள்ள நம்பிக்கையைப் புதுப்பித்துக் கொண்டே யிருப்போமாக. சுபா பிரச்னை என்பது ஒரு நிலப் பிரச்னையோ, மொழிப் பிரச்னையோ அல்ல. 'தங்களுடைய நிரந்தர நலனுக்கு உகந்தது இதுதான்' என்று நினைத்து உணர்ச்சியுடன் செயல்படும் ஒரு மக்கட் தொகை சம்பந்தப்பட்ட விஷயமிது. பஞ்சாபி சுபா பிரிக்க வேண்டும் என்று காங்கிரஸ் காரியக்கமிட்டி தீர்மானம் செய்திருப்பது மொழியை அடிப்படையாகக் கொண்டிருக்கக் கூடும்; ஆயினும் அது சீக்கியரின் உள்ளார்ந்த விருப்பங்களையும் மதிப்பதாக உள்ளது. காங்கிரஸின் இந்த விவேகமான முடிவு, ஸந்த் ஃபதே சிங்கைத் தாராசிங்குக்கு மேற்பட்டவராகக் காட்டிச் சீக்கிய வாக்காளர்களை ஏமாற்றும் தேர்தல் தந்திரமாகிவிடாது என்று நம்புவோமாக.

★

சீக்கிய மதம் ஹிந்து மதத்துக்கு விரோதமானது என்று எண்ணி விடலாகாது. 'ஓம்', 'ஹரி', 'தர்மம்' என்ற பொதுவான பதங்களைக் கண்டாலே இவ்விரு மதங்களுக்குமிடையே யுள்ள ஒற்றுமை விளங்கும். பஞ்சாபில் ஒரு குறிப்பிட்ட சந்தர்ப்பத்தின் தேவைக்கு ஏற்ப ஹிந்து மதத்தை அமைக்க வேண்டும் என்ற கருத்திலேயே சீக்கிய மதம் ஸ்தாபிக்கப்பட்டது. ஆன்மிகத் தலைவர்களும் முனிவர்களும் கூறும் உபதேசங்களும் அவர்கள் நடத்தும் வாழ்க்கையும் அவர்களுக்குச் சீடர் குழாத்தை உண்டாக்குகின்றன. இவர்கள் பிற்பாடு தனிப்பட்ட வகுப்பினராகி விடுகிறார்கள், இந்த ரீதியில் சீக்கியருக்கிடையே யுள்ள தனிப்பட்ட வகுப்பு உணர்ச்சியை நாம் மறுப்பதற்கில்லை. எனினும் சீக்கிய மதமும் நமது வைஷ்ணவ பக்தி மார்க்கத்தின் 'க்ஷத்திரிய' உருவமே என்பதை மறவாதிருப்போமாக.




★

விலைவாசிகள் ஏறுவதற்குச் சர்க்காரின் கட்டுப்பாடும் பண வீக்கக் கொள்கையும்தான் காரணம் என்று நிதி மந்திரி சௌத்திரி நிச்சயமாக அறிவார். எனினும் அவர் இந்த உண்மையைச் சொல்லாமலே பார்லிமெண்டில்

பதில்கள் சொல்லியிருப்பது ஹாஸ்யமாகவும் இருக்கிறது; சோகமாகவும் இருக்கிறது. பழைய கொள்கைகளை மாற்றி அறிவுக்குகந்த புதிய கொள்கைகளைச் சிறிது சிறிதாகக் கடைப்பிடிக்க வழி காண வேண்டும் என்ற கருத்தில்தான் அன்புக்குரிய லால்பஹாதூர் அவர்கள் ஸ்ரீ சச்சின் சௌத்திரியை நிதி மந்திரியாக நியமித்தார். ஆனால் துரதிருஷ்ட வசமாக லால்பஹாதூர் அவர்கள் மரண முற்றதால் அவரது எண்ணம் நிறைவேற வில்லை. விவேகத்தின் வழி செல்வதற்கான பலமும் சுதந்திரமும் ஸ்ரீ சௌத்திரிக்கு இல்லை. 'வியாபார சமூகம் முழுவதுமே கொடுமை வாய்ந்தது; அதனால்தான் விலை ஏறுகிறது' என்ற வழக்கமான சித்தாந்தத்தை அவர் சொல்லாதது அவருடைய நேர்மையைக் காட்டுகிறது. ஆனால் இது போதாது. விலை ஏற்றத்துக்கான உண்மைக் காரணத்தைக் காணாமல் ஒரு குறிப்பிட்ட கொள்கையையே சங்கற்பமாகப் பிடித்துக் கொண்டிருப்பது நமது தில்லி யசமானர்களுக்கு வழக்கமாகி விட்டது. எதை வேண்டுமானாலும் சர்க்கார் தன் திட்டப்படி உருவாக்கிவிட முடியும் என்று கருதும் சோஷலிஸ சர்க்கார் தாங்கவொண்ணாத கொடுமையாகும்.

★

சென்னையிலுள்ள தென்னிந்திய வர்த்தக சபைக்கு விஜயம் செய்த ருஷியப் பொருளாதார நிபுணர் டாக்டர் ஜீ. கே. ஷிர்கோவ் அவர்கள், நம் நாட்டில் தனியார் துறை, சர்க்கார் துறை இரண்டிலுமே புதிய முதலீடுகள் ஏற்பட வழிசெய்ய வேண்டுமென்று கூறியிருக்கிறார். சோஷலிஸ நாட்டுப் பிரதிநிதியின் கருத்து நம் 'சோஷலிஸ' நாட்டுக்கு முக்கியத்துவம் வாய்ந்தது; அதோடு, மற்ற சுதந்திர நாடுகளின் நிபுணர்கள் கூறுவதை விட ருஷிய நிபுணர்கள் கருத்துக்குத் தில்லி சர்க்காரின்மீதும் அதிகச் செல்வாக்கு உண்டு.

இதே சமயத்தில் இந்தியப் பொறி இயல் சங்கத் தலைவர் ஸ்ரீ எஸ். கே. தத்தா கூறியிருப்பதையும் கவனிப்போம். மற்ற நாடுகளில் சர்க்காருக்கு உரியவை என்று கருதப் படாத துறைகளிலெல்லாம் இந்திய அரசாங்கம் புகுந்து, 'ஒரு சாம்ராஜ்யத்தை ஸ்தாபிப்பது'தான் நமது பொருளாதாரத்தைச் சீர் குலைக்கும் முக்கியமான அம்சம் என்று அவர் கூறியுள்ளார். சுகாதாரம், வீட்டு வசதி, சாலைகள், துறைமுகங்கள், நீர்ப்பாசனம், மின்சாரம் முதலிய சர்க்காருக்குரிய துறைகளில் போதிய நிதி முதலீடு செய்யப்படாமல் இருப்பதற்குக் காரணம், மற்ற வியாபாரத் துறைகளில் சர்க்கார் நிதி திருப்பப்படுவது தான் என்று அவர் சுட்டிக் காட்டினார்.

★

ஜெர்மனியில் அதிகபட்ச வாக்குகள் பெறும் முதல் மூன்று பெரிய கட்சிகளின் செலவுக்குச் சர்க்காரே நிதி உதவுகிறது. இதைச் சிறிய கட்சிகள் ஆட்சேபித்துள்ளன. நம் நாட்டில் ஆட்சியிலுள்ள காங்கிரஸ் கட்சியின் தேர்தல் செலவைச் சர்க்காரே ஏற்றுக் கொண்டால் நமக்கு விசித்திரமாயிருக்கும். ஆனால் ஜெர்மனியிலோ இப்படி ஒரு வழக்கம் உள்ளது. சர்க்காரின் வரிப் பணத்தைக் கொண்டு இயங்கும் இம்மூன்று கட்சிகளையும் மக்கள் அதிகார ஸ்தானங்களாகக் கருதி அவற்றின் பிரஜைகளாகவே தங்களைக் கருதுவர் என்று மற்ற கட்சிகள் ஆட்சேபனை தெரிவித்துள்ளன. கட்சியையும் அரசாங்கத்தையும் மக்கள் ஒன்றெனக் குழப்பிக் கொள்ளுமாறு விடலாகாது என்று அவை கருதுகின்றன. இதுபற்றி நீதி மன்றம் விரைவில் தீர்ப்பளிக்கும்.

நமது தேசத்தில் தேர்தல் செலவைக் கட்டுப் படுத்துவது பற்றி நான் கூறிவருவதை இங்கு மறுபடியும் நினைவூட்டுகிறேன். வாக்காளர்களுக்கு அடையாளச் சீட்டுத் தருவது, அவர்களை வாக்குச் சாவடிக்கு அழைத்து வருவது ஆகியன சர்க்காரின் பொறுப்பு. இதற்கான செலவையும் சர்க்காரே ஏற்க வேண்டும். அல்லது சர்க்கார் சிப்பந்திகள் மோட்டார் கார்களில் வீடு வீடாகச் சென்று வாக்குகளைச் சேகரிக்க வேண்டும். இந்த யோசனை போதிய கவனத்தைப் பெறவில்லை. காரணம், ஆளும் கட்சிக்கு எவ்வளவு செலவு செய்வதற்கும் வசதி உள்ளது. மற்றக் கட்சிகளுக்கோ வாக்குச் சேகரிக்க வேண்டிய சர்க்கார் சிப்பந்திகளே ஆளும் கட்சிக்குச் சாதகமாக வாக்காளரைத் திருப்பி விடுவார்கள் என்று சந்தேகம்.

★

காங்கிரஸ் சர்க்காரின் மீது ருஷியா தனது செல்வாக்கைச் செலுத்தித் தன் வழி நடக்குமாறு நிர்ப்பந்தப்படுத்த ஆரம்பித்துவிட்டது என்று தேவ் மொரார்காவின் பத்திரிகை அறிக்கைகள் கூறுகின்றன. இச்சமயத்தில் எதிர்க் கட்சிகள் ஒன்று கூடி ருஷிய நெரிசலைத் தவிர்க்க முன்வர வேண்டும். ருஷியாவுக்குப் பலத்த ஆதரவாகப் பார்லிமெண்டில் ஒரு கோஷ்டி இருப்பதால், ருஷியாவின் புதிய போக்கை ஆபத்தாகக் கருத வேண்டும். கம்யூனிஸ்ட் அங்கத்தினர்கள் ருஷியாவுக்குச் சாதகமாகப் பேசுமளவுக்கு, அமெரிக்காவை ஆதரிப்பவர்கள் தமது கருத்தை வெளியிடத் தயங்கி வருகிறார்கள்.

ருஷியாவுக்கும் சைனாவுக்குமிடையே ஏற்பட்டுள்ள பிளவு இந்தியக் கம்யூனிஸக் கட்சியை எப்படிப் பாதித்திருக்கிறது என்பதை விவாதிப்பதற்காக இந்திய கம்யூனிஸ கோஷ்டியொன்று மாஸ்கோவுக்குச் சமீபத்தில் சென்றிருப்பதாகச் சொல்லப் படுகிறது. இக்குழு இந்தியாவின் அரசியல், சமூக, பொருளாதார நிலைமையை மாஸ்கோவில் விரிவாக ஆராயும் என்றும் தெரிகிறது. இத்தகைய நடவடிக்கைகளைத் தடுக்காமலே விட்டால், சோவியத் ருஷியாவைச் சுற்றி வரும் சந்திரனாக இந்தியாவை ஆக்குவதில் முடியும். உபகிரகங்களைச் சுற்ற விடுவதில் ருஷியர்களின் சாதனையை நாம் அறிவோமல்லவா!

# பாங்க் ஆப் பரோடாவிலுள்ள நான் உங்களவன்



உங்கள் அருகாமையிலுள்ள எமது கிளைக்குச் சென்றீர்களானால் ஏஜெண்டு ஒருவரைச் சந்திப்பீர்கள். என் போலவே அவர் அன்பும் ஆதரவுமாக உதவுபவர். அவரும் <u>உங்களவரே</u>.

நாங்கள் எல்லோருமே உங்களைச் சந்திக்க விரும்புகிறோம். உங்கள் பணப் பிரச்னைகளைத் தீர்த்துதவ ஆவலாயுள்ளோம். உண்மையாகவே உங்கள் பணம் 'பத்தும்' செய்யவேண்டும் அல்லவா உங்களுக்கு? அதற்கான வழி பாங்க் ஆப் பரோடாவில் பிக்ஸெட் டெபாசிட் அக்கவுண்ட் ஒன்றைத் துவக்குவதே. நூறே ரூபாய் போட்டீர்களானாலும் ஆண்டு ஒன்றுக்கு 7½ சத விகிதம் வரை வட்டி பெறுவீர்கள். அடிக்கடி பணம் எடுக்கவேண்டியிருப்பின் பாங்க் ஆப் பரோடா ஸேவிங்ஸ் அக்கவுண்டில் போட்டு வைக்கலாம். அதன் மூலம் ஆண்டுதோறும் உங்களுக்கு 4 சத விகித வட்டி கிடைக்கும்; தவிர முன்னறிவிப்பு இன்றியே வருடத்திற்கு 104 தடவைகள் வரை நீங்கள் பணமெடுக்க முடியும்...

பண விவகாரங்களை நடத்துவது என்றால் அபாரமான அனுபவமும் நிபுணத்துவமும் வேண்டுமல்லவா? அந்த இரண்டுமே பாங்க் ஆப் பரோடாவிலுள்ள எங்களிடம் உண்டு. உங்கள் அருகேயே எமது கிளை இருப்பதால் ஒரு நாள் நீங்கள் வந்து உங்களவரைப் பார்த்தாலென்ன?

பலதரப்பட்ட எங்கள் பணிகளைப் பற்றிய 'உங்கள் சேவை எங்கள் கடமை' என்ற முழு விவர நூலின் இலவசப் பிரதியினை தயவுசெய்து அருகிலுள்ள கிளையிலிருந்து பெறுங்கள். அல்லது எழுதிக் கேளுங்கள்.

## தி பாங்க் ஆப் பரோடா லிமிடெட்

(ஸ்தாபிதம் 1908) தலைமை அலுவலகம்: பரோடா.

இந்தியாவிலே 285 கிளைகளுக்கு மேல். தவிர, லண்டன், கிழக்கு ஆப்பிரிக்கா, கிழக்கு பாகிஸ்தான், ஃபிஜித் தீவுகள், மாரிஷஸ் ஆகிய இடங்களிலும் கிளைகள்.

CMBB.6A TM

# மூங்கிலின் மீது பருத்தி விளைவிக்க முடியுமா உங்களால்?




மூங்கிலின் மீது பருத்தி விளைவிக்க எங்களால் முடியுமென்று கூறிக்கொள்ளவில்லை நாங்கள். என்றாலும் அதற்கு அடுத்தபடியான ஒன்றை நிறைவேற்றுகிறோம். மூங்கிலையே பருத்தி போன்றதொரு பஞ்சாக மாற்றுகிறோம்.

கிராஸிம் ஸ்டேபிள் ஃபைபர் என்று நாங்கள் வழங்குகிறோமே அது இயற்கைப் பஞ்சு போலவே இருக்கும். பருத்தியோடு அதனைக் கலந்து நெசவு செய்வதனால் கிடைக்கும் துணி, மாறாத புதுமெருகோடு என்றும் பொலிவுடன் சோபிக்கும். கிராஸிம் செயற்கைப் பஞ்சுடன் பருத்தி இணைந்த துணிகள் உயரிய பண்புகள் கொண்டவை, மேனிக்கு இணக்கமானவை, அணியக் கச்சிதமானவை, நீடித்துழைப்பதோடு, சலவைக்கும் எளிதானவை. அதே சமயம் விலையும் மிகக் குறைவாக இருப்பது குறிப்பிடத்தக்கது. எனவே, துணி வாங்கும்போது குறிப்பிட்டுக் கேளுங்கள்:

## கிராஸிம் ஸ்டேபிள் ஃபைபர் இணைந்தது.

---

**க்வாலியர் ரேயான் ஸில்க் மானுபாக். (வீவிங்) கம்., லிட்., நாக்தா (ம.பி)**

தொழில்நுட்ப விவரங்களுக்கு தயவுசெய்து எழுதுக:
டெக்ஸ்டைல் ரிஸர்ச் டிபார்ட்மெண்ட், குவாலியர் ரேயான், இன்டஸ்ட்ரி ஹவுஸ்,
159, சர்ச்கேட் ரிக்ளமேஷன், பம்பாய்-1.

# செய்திப் படங்கள்

1. கலைமகள் ஆசிரியர் ஸ்ரீ கி. வா. ஜகந்நாதன் அவர்களின் சஷ்டியப்த பூர்த்தி சென்னையில் விமரிசையாக நடை பெற்றது. தருமை ஸ்ரீலஸ்ரீ சோமசுந்த ரத் தம்பிரான் சுவாமிகள் பொன்னாடை போர்த்திக் கௌரவித்தார்.

(புகைப்படம்: [illegible])

2. லண்டனுக்குத் தேர்தல் சமயத்தில் விஜயம் செய்த சென்னை எதிர்க் கட்சித் தலைவர் திரு வி. ஆர். நெடுஞ்செழியனை பி. பி. ஸி. தமிழோசை நிகழ்ச்சிக்காகத் திரு சங்கரமூர்த்தி பேட்டி கண்டார்.










3. இந்திய விவசாயிகள் அதிக விளைச்சலுள்ள கோதுமைப் பயிரில் நாட்டம் செலுத்தியுள்ளனர். ஜலந்தரில் அதிக விளைச்சலுள்ள கோதுமைப்பயிரை மந்திரி ஸ்ரீ சுப்பிரமணியம் பார்வையிடுகிறார்.

4. திருவாவடுதுறை ஆதீனத்தில் மத விஷயமாகத் திருவாவடுதுறை ஆதீனகர்த்தர், தருமபுர ஆதீன கர்த்தர், மதுரை ஆதீனகர்த்தர், குன்றக் குடி அடிகள் ஆகிய நால்வரும் சந்தித் துப் பேசினர்.

5. ஸ்ரீ கலாநிகேதன் பன்னிரண்டாவது ஆண்டு விழாவைச் சென்ற 9-4-66 அன்று ராஜா அண்ணாமலை மன்றத்தில் தொழில் மந்திரி திரு வேங்கடராமன் தலைமையில் சபாநாயகர் திரு செல்ல பாண்டியன் தொடங்கி வைத்தார். ரவி அவர்களின் அன்பளிப்பான ஒரு விநாய கர் படத்தைக் கலாநிகேதன் தலைவர் திரு மூர்த்தியிடம் அளிக்கிறார் மந்திரி.






# டினோபால் வெண்மை பளிச்சிடச் செய்வதில் இணையற்றது.

துவைத்த துணிகளைக் கடைசியாக அலசுவதற்கு முன், தண்ணீரில் சிறிதளவு டினோபால் சேர்த்துப் பாருங்கள், உங்கள் வெள்ளைத் துணிகளெல்லாம் எப்படி மேலும் வெண்மை பளிச்சிடுகின்றன! சட்டைகள், புடவைகள், டவல்கள், விரிப்புகள் எல்லாம் எப்படி அதிகரித்த வெண்மை துலங்க விளங்குகின்றன!

இந்த அதிகரித்த வெண்மைக்கு ஆகும் செலவுதான் என்ன? துணி ஒன்றுக்கு ஒரு பைசாவுக்கும் குறைவுதான்! கால் தேக்கரண்டி அளவு டினோபால் ஒரு வாளித் துணிகளை வெண்மை பளிச்சிடச் செய்கிறது.

விஞ்ஞான ரீதியாகத் தயாரிக்கப்பட்ட டினோபாலை எப்பொழுதும் உபயோகியுங்கள். அதனால் துணிகளுக்கு ஒருவிதமான கெடுதலும் ஏற்படுவதில்லை.



டினோபால் இப்பொழுது ஸீல் செய்யப்பட்ட அலுமினிய ரேக்குப் பேக்கெட்டுகளிலும் கிடைக்கிறது. ஒரு பேக்கெட் டினோபால் ஒரு வாளித் துணிகளை வெண்மை பளிச்சிடச் செய் கிறது- சிறிதும் வீணாவதில்லை, உபயோகிக்கச் சுலபமானது, தொந்தரவற்றது.

டினோபால், ஜே.ஆர்.கெய்கி, எஸ் ஏ.பாஸ்ல், ஸ்விட்சர்லாந்து அவர்களின் பதிவுபெற்ற வியாபாரச் சின்னமாகும்
சுஹ்ரித் கெய்கி லிட், த.பெ. 965, பம்பாய் 1 பிஆர்.

Shilpi SG 223A Tam



# சிவனருட் செல்வர்

தேவாரத்தைத் தேடி வந்த மன்னர் அப் புண்ணியப் பதிகங்களில் பல செல்லரித்திருக்கக் கண்டு உள்ளம் புண்ணாயினன்.

அப்போது "தேவாரப் பதிகங்களில் இக்காலத்துக்கு வேண்டுவனவற்றை மாத்திரம் வைத்துக் கொண்டு பிறவற்றைச் செல்லரிக்கச் செய்தோம்" என்ற அருள் வாக்கு ஒலித்தது. அவ்வருள்வாக்கினால் மனந்தேறிய மன்னன் செல்லரிக்காது எஞ்சியுள்ள திருப்பதிகங்களைத் தொகுத்துக் கொடுக்கும்படி நம்பியாண்டார் நம்பியை வேண்டிக்கொண்டான். மன்னன் வேண்டுகோளுக்கிசைந்த நம்பியாண்டார் நம்பிகள் திருமுறைகளைப் பதினொன்றாக வகுத்து வைத்தார்.

திருஞான சம்பந்தர் அருளிச் செய்த தேவாரத் திருப்பதிகங்கள் முதல் மூன்று திருமுறைகள். திருநாவுக்கரசர் அருளிச் செய்த திருப்பதிகங்கள் நான்கு ஐந்து, ஆறும் திருமுறைகள். சுந்தரமூர்த்தி நாயனார் அருளிச் செய்த தேவாரம் ஏழாந் திருமுறை. தேவாரத் திருப்பதிகங்களை ஏழு திருமுறைகளாக வகுத்த பின்பு மாணிக்கவாசக சுவா



திருமுருக கிருபானந்தவாரியார்

மிகள் அருளிச் செய்த திருவாசகம், திருக்கோவையார் என்னும் இரண்டு நூல்களை எட்டாந் திருமுறையாகவும், திருமாளிகைத் தேவர், சேந்தனார், கருவூர்த் தேவர், பூந்துருத்தி நம்பிகாடநம்பி, கண்டராதித்தர், வேணாட்டடிகள், திருவாலியமுதர், புருடோத்தம நம்பி, சேதிராயர் முதலிய ஒன்பதின்மர் பாடிய திருவிசைப்பாப் பதிகங்கள் இருபத்தெட்டும், அவற்றுள் சேந்தனார் பாடிய திருப்பல்லாண்டுப் பதிகம் ஒன்றும் ஆக இருபத்தொன்பது பதிகங்களை ஒன்பதாந் திருமுறையாகவும், திருமந்திரப் பாடல்களைப் பத்தாந் திருமுறையாகவும், காரைக்காலம்மையார் திருவாலவாயுடையார் திருமுகப் பாசுரம் முதலிய பிரபந்தங்களைப் பதினோராம் திருமுறையாகவும் வகுத்தார். திருத்தொண்டர் வரலாற்றைச் சுருக்கமாகக் கூறும் திருத்தொண்டர் திருவந்தாதி, தொகையடியார் ஒன்பதின்மர், தனியடியார் அறுபத்து மூவர் ஆகிய எழுபத்திரண்டு சிவனடியார் வரலாற்றையும் எண்பத்தொன்பது இனிய பாடல்களில் கூறுகின்றது. சேக்கிழாரடிகள் திருத்தொண்டர் புராணம் பாடுவதற்கு ஆதாரமாகக் கொண்ட நூல்களுள் அது ஒன்று.

**அந்த மெய்ப்பதி கத்தடி யார்களை**
**நந்தம் நாதனும் நம்பியாண் டார்நம்பி**
**புந்தி ஆரப் புகன்ற வகையினால்**
**வந்த வாறு வழாமல் இயம்புவாம்**

என்னும் சேக்கிழாரடிகளின் திருவாக்கினால் இதனை நன்கு அறியலாம்.

நம்பியாண்டார் நம்பி திருமுறைகளைப் பதினொன்றாக வகுத்த காரணம் யாது?

சைவ சாத்திரத்தில் மந்திரங்கள் பதினொன்று. இதற்கு மேல் மந்திரமே யில்லை.

**ஓம் ஈசானாய நம:**
**ஓம் தத்புருஷாய நம:**
**ஓம் அகோராய நம:**
**ஓம் வாமதேவாய நம:**
**ஓம் சத்யோஜாதாய நம:**

இவை ஐந்தும் பஞ்சப் பிரம்ம மந்திரம்.

**ஓம் ஹ்ருதயாய நம:**
**ஓம் சிரசே நம:**
**ஓம் சிகாய நம:**
**ஓம் கவசாய நம:**
**ஓம் நேத்ரேப்யோ நம:**
**ஓம் அஸ்த்ராய நம:**

இவை ஆறும் சடங்க மந்திரம்.

இந்த ஐந்தும் ஆறும் சேர்ந்து பதினொன்றும் சம்மிதா மந்திரம் எனப் பெறும்.

ஏழு கோடி மந்திரம் என்பதில் கோடி என்றால் நூறு லட்சம் சேர்ந்த கோடி என்பது பொருளன்று. கோடி என்பதற்கு நுனி என்று பொருள். கோடி வீடு என்றால் தெருவின் நுனியில் உள்ள வீடு எனவே வழங்கப்படுகிறது அல்லவா? 'நம:, ஸ்வதா, ஸ்வாஹா, வஷட், வௌஷட், பட், ஹூம்பட்' என்ற இந்த ஏழும் மந்திரங்களின் ஏழு கோடி என்பதை உணர்ந்து கொள்ள வேண்டும்.

ஒரு மருந்தை நோய்களுக்கு ஏற்றவாறு அநுபானங்கள் பலவற்றில் வைத்துத் தருவது மருத்துவ முறை. லிங்கச் செந்தூரத்தை ஓம நீரில் தந்தால் பேதி நிற்கும். தேனில் தந்தால் சுரம் நிற்கும். இஞ்சி நீரில் தந்தால் பித்தம் நீங்கும். இவ்வாறு அநுபானத்தை மாற்றி ஒரே மருந்தைத் தந்து நோய்களைத் தணிப்பது போல, ஒரு மந்திரத்தை மேற்சொன்ன கோடிகளுடன் கூட்டி உச்சரித்தால் வெவ்வேறு பயனைப் பெறலாம்.

அஸ்த்ர தேவரை வணங்கும்போது, 'அஸ்த்ராய நம:' என்று கூற வேண்டும். அஸ்திர தேவருக்கு ஒன்றைத் தந்து, திருப்தி செய்விப்பதாயின், 'அஸ்த்ராய ஸ்வதா' என்று கூறவேண்டும். அஸ்த்ர தேவருக்கு ஒரு பொருளை யாகத்தில் தரும்போது, 'அஸ்த்ராய ஸ்வாஹா' என்று கூறவேண்டும். ஒரு தீமையை விலக்குவதாயின், 'அஸ்த்ராய பட்' என்று கூறவேண்டும்.

இவ்வாறு கோடிகளை மாற்றி மாற்றி மந்திரங்களுடன் உச்சரித்தால் பல நலன்கள் விளையும். எனவே, ஏழு கோடிகளுடன் கூடிய பதினொரு மந்திரங்களுமே பதினொரு திருமுறைகளாகும்.

திருமுறைகளை வகுத்த நம்பியாண்டார் நம்பிகள் சிவனடியார் சரிதங்களாகிய திருத்தொண்டத் தொகையை முதனூலாகக் கொண்டு, திருத்தொண்டர்களின் தொண்டுகளையும் அத்தொண்டுகளால் அவர்கள் பெற்ற பேறுகளையும் கலித்துறை அந்தாதியில் வகைப்படுத்தி விரித்தருளினார்.

இந்த வரலாற்றைச் சேக்கிழார் பெருமான் கூறி முடித்ததும், "அந்தத் திருத்தொண்டர் சரிதங்களை ஓதி அருள வேண்டும்" என்று அநபாய மன்னன் அவரை வேண்டிக் கொண்டான். சேக்கிழார் பெருமான் திருத்தொண்டத் தொகையையும், நம்பியாண்டார்

நம்பி அந்தாதி ஆகியவைகளையும் விரித்துப் பொருள் கூறி யருளினர்.

அவ்விரிவுரையைக் கேட்ட வளவர் கோன் உள்ளம் உருகி, சிவபெருமான் திருவருட் திறத்தையும், திருத் தொண்டர்களின் அன்புத் திறத்தையும் எண்ணி எண்ணி இதயம் மகிழ்ந்தான். சேக்கிழாரை நோக்கி, ''இப் புண்ணிய வரலாறுகளை விரித்து உலக மெல்லாம் உணர்ந்து தெளிந்துய்யப் பெரும் காவியமாகப் பாடித் தரவேண்டும்'' என்று கேட்டுக் கொண்டு பொன்னும் மணியும் தந்தான்.

அநபாய மன்னன் கொடுத்த பொன்னும் மணியும் அறஞ் செய்தற்காகும் என்று அருண்மொழித் தேவர் ஏற்றுக் கொண்டு தில்லையம்பதியை அடைந்தார். தில்லையின் எல்லை வந்தவுடனே வாகனத்தினின்றும் இறங்கி அம்பலவாணரை நினைந்து மண் மேல் வீழ்ந்தார்; அவரது உடல் புளகித்தது; உள்ளம் உருகியது; திருவருள் மாமாகிச் சிவகங்கையில் முழுகிப் பொன்னம்பலம் சென்றுர். ஆனந்தத் தாண்டவம் புரியும் அம்பலவாணரைக் கண் குளிரக் கண்டு, பேரானந்தமுற்றுத் தொடு மணற்கேணி போல் காதலாகிக் கசிந்து கண்ணீர் பெருக்கினர்.

''அம்பலவாணரே! அடியேன் உமது திருத்தொண்டர் வரலாறுகளைப் பாடி முடிக்க அடி எடுத்துத் தர வேண்டும்'' என்று பெருமானை வேண்டித் தம்மை மறந்தார். அப்போது வானில், ''உலகெலாம்'' என்ற அருள் ஞான ஒலி எழுந்தது. யாவரும் கேட்கும் வண்ணம் ஒலித்த அப்பஞ்சாக்ஷர மந்திரத்தைக் கேட்ட தில்லைவாழ் அந்தணரும் ஏனையோரும் அதிசயித்தனர். சேக்கிழார் பெருமானுக்கு அம்பலவாணர் சந்நிதியில் பரிவட்டமும் திருநீறும் தரப்பட்டன. அவற்றைப் பெற்ற சேக்கிழாரடிகள், சமய குரவர்களைச் சேவித்து ஆயிரங்கால் மண்டபம் சென்றுர்; அங்கு தவ ஒழுக்கத்துடன் திருவருளைச் சிந்தித்து, 'உலகெலாம்' என்று இறைவன் அடியெடுத்துக் கொடுத்ததையே முதலாக வைத்து மிக மிக இனிய செந்தமிழ்ப் பாடல்களாகப் பாடி 4,253 திருப்பாடல்களால் முடித்து, ''திருத்தொண்டர் புராணம்'' என்று அதற்குப் பெயரிட்டார்; அதனை அம்பலவாணர் திருவடியில் வைத்து வழிபட்டார்.



அநபாயன் வாழ்ந்த ஊர் உறையூர். கரூர், திருவாரூர், காவிரிப் பூம்பட்டினம் ஆகியவையும் சில சமயங்களில் காஞ்சியும் அவனுக்கு





ராஜதானியாய் அமைந்திருந்தன. சேக்கிழார் தில்லைக்கு எழுந்தருளியபின் அநபாய மன்னன் பலப்பல தூதர்களையும் ஒற்றர்களையும் அவ்வப்போது அனுப்பி, ''காவியம் எவ்வளவு வரை பாடியாயிற்று? முடிவதற்கு இன்னும் எத்தனை காலமாகும்? அதற்கு நாம் செய்ய வேண்டியது யாது?'' என்று கேட்டுக் கொண்டேயிருந்தான். அவ்வப்போது வந்த தூதர்களும் ஒற்றர்களும் காவியம் எவ்வளவு பகுதி வரை முடிந்திருக்கிறது என்பதை மன்னனிடம் சென்று தெரிவிப்பார்கள். புராணம் முடிந்தவுடன் வந்த தூதர்கள் மன்னனிடம் திரும்பிச் சென்று அந்த நற்செய்தியைக் கூறினார்கள். அவ்வாறு கூறிய தூதர்களுக்குப் பொன்னும் மணியும் ஆடைகளும் வழங்கினான் மன்னன். உடனே பரிவாரங்களுடன் தானே தில்லைக்குப் புறப்பட்டான்.

அநபாயச் சோழன் வருவதை யறிந்த அன்பர்களும், தில்லையின் மூவாயிரம் அந்தணர்களும், சேக்கிழாரும் அரசனை எதிர்கொண்டு அழைத்து உபசரித்தனர். மன்னர் பெருமான், தனது அமைச்சராகிய சேக்கிழாரது சிவநல உருவையும், தவநலத் துறவையும் கண்டு அவரது அடிமலர் மீது விழ்ந்து வணங்கினான். எல்லோரும் கனகசபை சென்று அம்பலக் கூத்தரைச் சேவித்தார்கள். ''அநபாய! 'உலகெலாம்' என்று நாமே அடி எடுத்துக் கொடுக்க நம் அன்பன் சேக்கிழான் திருத்தொண்டர்களது இனிய வரலாறுகளை விரித்துப் புராணம் பாடினான். அதனைக் கேட்டு நீ உய்வு பெறுக'' என்று ஓர் அசரீரி வாக்கும், அம்பலவாணர் சிலம்பொலியும் பொன்னம்பலத்தில் ஒலித்தன.

வேந்தர்கோமான் மனம் மிக மகிழ்ந்து திருத்தொண்டர் புராணத்தைக் கேட்கும் பொருட்டுத் திசைகள்தோறும் உள்ள அன்பர்களுக்கும் அறிஞர்களுக்கும் ஓலைகள் அனுப்பினான்; திருக்கோவிலையும், திருவீதிகளையும் நன்கு அலங்கரிக்கச் செய்தான். உலகின் எல்லாப் பக்கங்களிலிருந்தும், வடமொழி தென்மொழிகளில் வல்லுனர்களான புலவர் பெருமக்களும், சிற்றரசர்களும் அடியார்களும் பிறரும் வந்து சிதம்பரத்தில் குழுமினார்கள்.

கனகசபைக்குமுன் கோமயத்தால் மெழுகித் தூப தீபங் கொடுத்து, அறுகால் பீடமிட்டு, அதன் மேல் பசும் பட்டு விரித்து, நறுமலர் தூவி, அதன் மீது திருத்தொண்டர் புராணத்தை எழுந்தருளப் புரிந்தனர். மன்னர் பெருமான் அருண்மொழித் தேவரை அடிபணிந்து, ''தேவரீரே, திருத்தொண்டர் புராணத்தை வாசித்துப் பொருள் அருளிச் செய்ய வேண்டும்'' என்று வேண்டிக் கொண்டான்.

ஐந்து இலக்கணங்களிலும் வடமொழியிலும் வல்லவரான சேக்கிழார் பெருமான் அப்பேரவையின் நடுவே அமர்ந்து, ஆனந்தத் தாண்டவனுக்கு உகந்த நாளும் திருஞான சம்பந்தர் திருவவதாரம் புரிந்த நாளும், அவர் தம் திருவாய் மலர்ந்து அழுது திருஞானப் பாலைப் பருகிய நாளும் திருவாதிரை நாளாகுமாதலின் சித்திரை மாதம் திருவாதிரை நாளில் திருத்தொண்டர் புராணத்தை அரங்கேற்றத் தொடங்கினார். அடுத்த சித்திரைத் திருவாதிரை நாளன்று புராணம் இனிது முடிவு பெற்றது. இடையிடையே மூவர் தேவாரமும், திருமந்திரமும், காரைக்காலம்மையார் அருளிய திருப்பாடல்களும்,

சேரமான் பெருமாள் அருளிய அருட் பாடல்களும், ஐயடிகள் அருளிய திருப் பாடல்களும் பொருள் விரித்துப் பேசப்பட்டன. நாடோறும் புராணம் கேட்டோர் அனைவர்க்கும் மன்னர் பெருமான் இனிய நல்லுணவு வழங்கினன். திருத் தொண்டர் புராணத்தை ஏத்துவோரும் பாராட்டுவோரும், ஆங்காங்கு நிறைந் துள்ள கவிநயங்களைக் கண்டு மகிழ்வோரும், சேக்கிழாரடிகளின் தெய்வப் புலமையைக் கண்டு வியந்து புகழ்வோரும், இன்பக் கண்ணீர் சொரிந்து அழுவோருமாக அன்பர்கள் அவையின்கண் விளங்கினர்.

திருத்தொண்டர் புராணத்தைத் தில்லைவாழ் அந்தணர் சிவமூல மந்திரத்தால் அருச்சித்துத் தூபதீபம் காட்டி வழி பட்டு, ஐந்தாவது வேதமெனப் பாராட்டினார்கள். அநபாய மன்னன் திருமுறையைப் பட்டினால் சூழ்ந்து, பொன் தட்டில் ஏந்தி யானையின் சிரத்தில் வைத்துச் சேக்கிழார் பெருமானை யும் அவ்வழகிய யானை மேல் ஏற்றித் தானும் ஏறி இரு கரங்களாலும் கவரி வீசினன்; ''இதுவன்றோ நான் செய்த தவப் பயன்!'' என்று மகிழ்ந்தான். மக்கள் பூமாரி பொழிந் தனர். இவ்வாறு திருவீதி வலம் வரும்போது சிதம்பரம் பூலோக கைலாசமாகப் பொலிவுற்றது. எல்லா வீதிகளிலும் வாழையும், கமுகும் நாட்டியிருந்தனர்; தோரணங்கள் அமைத் திருந்தனர். மனைகள்தோறும் பூரண கும்பங்கள் வைத்து, மலர் மாலைகளைத் தூக்கி, திருவிளக்கு ஏற்றி, இன்னிசைப் பாடல்கள் ஓதி அன்பர்கள் ஆரவாரித்தனர். ''திருமுறைத் தமிழ் பாடிய மூவரும் ஓர் உருவாக முளைத்தனர்'' என்பர் சிலர். ''வாணிதேவி வெண்டாமரைப் பூவையும் மறந்தனள்; சங்கப் புலவோர் பாவையும் மறந்தனள்; பதுமத்தோன் நாவையும் மறந்தனள்; குறுமுனியாம் தமிழ்க் கோவையும் மறந்தனள்; தெய்வச் சேக்கிழார் நாவிற் குடி கொண்டனள்'' என்பர் சிலர்.

''கருங் கடலைக் கரத்தால் நீந்தலாம்; கடற்கரையின் நொய் மணலை எண்ணி அளவிடலாம்; பெருங் கடல்மேல் வரும் அலைகளையும் எண்ணலாம்; அந்தக் கடலில் வாழும் மீன்களையும் அளவிடலாம்; விண்ணுறை உடுக்களையும் அளவிட லாம். திருத்தொண்டர் புராணத்தை யாரே அளவிட வல்லார்? நம் சேக்கிழார்க்கே எளிதாகும்; அமரர்க்கும் அரி தாகும்'' என்பர் சிலர்.

கருங்கடலைக் கைநீந்துக் கொள எளிது முந்நீர்க்
கடற்கரையின் நொய்மணலை எண்ணி அளவிடலாம்
பெருங்கடல்மேல் வருந்திரையை ஒன்றிரண் டென்றெண்ணிப்
பிரிதெழுதிக் கடையிலக்கம் பிரித்து விடலாகும்
தருங்கடலின் மீனை அளவிடலாகும் வானத்
தாரகையை அளவிடலாம் சங்கரன் தாள்தமது
சிரங்கொள் திருத்தொண்டர் புராணத்தை அளவிடநம்
சேக்கிழார்க் கெளிதலது தேவர்க்கும் அரிதே






திருவோலக்கம் முடிந்தபின் திருத்தொண்டர் புராணத்தைக் கனகசபையில் வைத்தார். சேக்கிழாரடிகளுக்குத் ''தொண்டர் சீர் பரவுவார்'' என்ற திருநாமமும், ஞான முடியும் சூட்டிச் சோழ மன்னன் வணங்கினான்.

நம்பியாண்டார் நம்பிகள் வகைப் படுத்தி அருளிய பதினொரு திருமுறைகளுடன் திருத்தொண்டர் புராணத்தைப் பன்னிரண்டாவது திருமுறையாகச் சேர்த்துச் செப்பேடு செய்து பொன்னம்பலத்தில் வைத்தனர்.

பின்னர் சேக்கிழாரடிகள் தில்லையிலேயே இருந்து ஆண்டவனை வழிபட்டுத் தவ வாழ்வில் தலைசிறந்து நின்றார். அருண்மொழித் தேவருடைய தம்பியாகிய பாலறுவாயர் குன்றத்தூரிலே தமது பெயரால் திருக்குளம் அமைத்துத் திருநாகேச்சுரப் பெருமானை வழிபட்டுக் கொண்டிருப்பதை அறிந்த அநபாயன் அவரை வரவழைத்து அமைச்சுப் பதவி தந்து, ''தொண்டைமான்'' என்ற பட்டத்தையும் அவருக்கு வழங்கினான்.

சேக்கிழார் பெருமான் உலகெலாம் உள்ள அலகிலாப் புகழுடை அடியவர் பெருமையை விளக்கி அம்பலவாணர் திருவடி நீழலிற் சேர்ந்தார். (தொடரும்)

---

## கண்டிப்பு + தயக்கம் + பயமுறுத்தல் + மன்னிப்பு = ஒரு படி விளக்கெண்ணெய்!

நான் மாலையில் மட்டுமே நடத்தப்படும் ஓர் உயர்தரக் கல்லூரியில் ஆங்கிலப் பேராசிரியையாகப் பணியாற்றிக் கொண்டிருந்தேன். அதாவது, பகலில் வேலை செய்துவிட்டு, அத்துடன் படிக்க விரும்பு பவர்களுக்காக மட்டுமே, நடத்தப்பட்ட கல்லூரி அது. மாணவ, மாணவிகள் எல்லாருமே வயதில் முதிர்ச்சி அடைந்தவர்கள்தான். அதனால், கல்லூரி தொடங்கிய முதல் நாளிலிருந்தே, நான் தாமதமாக வகுப்புக்கு வருபவர்களிடம் கண்டிப்பாக இருந்து வந்தேன். மாணவர்களும், என் வகுப்புக்குக் காலதாமதமாக வருவதை நிறுத்திக் கொண்டார்கள்.

ஒரு நாள் மாலை. வகுப்பு ஆரம்பித்துப் பத்து அல்லது பதினைந்து நிமிடங்கள் ஆகிவிட்டன. ரவீந்திர நாத் தாகூரின் ஒரு கதைத் தொகுப்பைப் பற்றி நான் அதிதீவிரமாகச் சர்ச்சை செய்து கொண்டிருந்தேன். அந்தி மயங்கி, இருள் கவிய ஆரம்பிக்கும் நேரம். கதவருகில் ஏதோ நிழலாடியது. ஓர் இளைஞர், கையில் சில புத்தகங்களுடன் தயங்கித் தயங்கி, கதவருகில் நின்று கொண்டிருந்தார். எனக்கு வந்ததே கோபம். இளைஞர்களின் பொறுப்பின்மையைப் பற்றி, ஒரு பத்து நிமிஷமாவது பேசி விட்டு, வந்தவரைக் கண்டிப்புடன் எதிர்காலத்திலாவது இந்தத் தவறைச் செய்யக் கூடாது என்ற பயமுறுத்தலுடன், வகுப்பில் உட்காரச் சொன்னேன். அவரும் வாய் திறவாமல் உட்கார்ந்துவிட்டார்.

நான் வகுப்பைத் தொடர்ந்தேன்.

மணி அடித்து, வகுப்பும் முடிந்தது. அந்த இளைஞர், நேராக என்னிடம் வந்தார். என்னிடம் மன்னிப்புக் கோரத்தான் வந்திருக்கிறார் என்று நானும் பின்தங்கினேன். ஆனால், அவர் சொன்னதோ!

தாம் ஹிந்திக்காகப் புதிதாக அமர்த்தப்பட்டிருக்கும் ஆசிரியர் என்றும், புதிதாகையால் வகுப்பறை தெரியாமல் தடுமாறிக் கொண்டிருந்ததாகவும் சொன்னாரே பார்க்கலாம்! கலப்படமில்லாத விளக்கெண்ணெயில் ஒரு படி குடித்தது போலிருந்தது எனக்கு.

-ஸ்ரீமதி லக்ஷ்மி நாராயண்

## ★ ★ ★ கல்லூரி நினைவுகள் ★ ★ ★

## தமிழ் பேசினால் தண்டனை!

திரு ஞானப் பிரகாச சுவாமிகள் சரித்திரம் கற்பிக்கும் ஆசிரியராக இருந்தபோது அவரிடம் ஒரு சொல்கூடத் தமிழ் பேசக் கூடாது. அப்படிப் பேசினால் சொல்லுக்கு ஒரு காசு வீதம் தண்டனை கொடுக்க வேண்டும். அம்முறையில் அதிகம் தண்டனைக் காசுகள் கொடுத்தவர் திரு ரா. பி. சேதுப் பிள்ளை. திரு பிள்ளை அவர்கள் சென்னை பல்கலைக் கழகப் பேராசிரியராக இருக்கும்பொழுது ஒரு தடவை திருச்சியில் சூசையப்பர் கல்லூரிக்குச் சொற்பொழிவு ஆற்ற வந்தார். அப்போது அவரது ஆசிரியரான திரு ஞானப் பிரகாச சுவாமிகள் அக் கல்லூரியின் ஆட்சியாளராக இருந்து வந்தார். அப்போது அவரைக் கண்ட திரு பிள்ளையவர்கள் 'நான் தங்களிடம் மாணவனாகப் பயின்ற காலத்தில் தங்கள் வகுப்பில் தமிழ் பேசியதற்காகச் சொல்லொன்றுக்கு ஒரு காசு வீதம் தண்டனை செலுத்தினேன். இன்று தங்கள் கல்லூரி விழாவில் 2000 தமிழ்ச் சொற்களுக்கு மேல் பேசப் போகிறேன். அதற்கு முன்னதாகவே தண்டனைப் பணத்தைத் தங்களிடம் கட்டி விடலாமா?' என்று வினயமாகக் கூறினார். அதற்கு சுவாமிகள், ''அப்போது ஆங்கிலம் வேண்டியிருந்தது. இப்போது அப்படி இல்லை. நானே உங்களிடம் தமிழில்தானே பேசுகிறேன்!'' என்றதும் திரு பிள்ளையவர்களின் உள்ளம் பூரித்தது. -தகவல்: அச்சுதமங்கலம் பாப்பா

# பெப்ஸோடெண்டின் 'இரியம் ப்ளஸ்'

## உங்கள் பற்களை சுத்தம் செய்து வெண்மை பளிச்சிடச் செய்யும்



எப்படி என்று பாருங்கள் : பெப்ஸோடெண்டில் மட்டுமே அற்புத நுரையை உண்டுபண்ணும் 'இரியம் ப்ளஸ்' உள்ளது. இது விஞ்ஞான முறைப்படி பிரத்தியேகமாக கண்டுபிடிக்கப்பட்ட சேர்க்கைப் பொருளாகும். இதனால் ஏராளமாக அற்புத நுரை உண்டாகி உங்கள் வாயின் உட்புறம் முழுவதையும், பற்களையும் நன்றாக சுத்தம் செய்யும்... பெப்பர்மிண்டைப் போல வாய்க்கு குளிர்ச்சியும், புத்துணர்ச்சியும் ஊட்டும். 'இரியம் ப்ளஸ்'ஸின் தனிப்பட்ட சக்தியால் பற்கள் இயற்கை வெண்மையுடன் பிரகாசிக்கும். அற்புத வெண்மை அளிப்பது பெப்ஸோடெண்டின் தனிப்பட்ட தன்மை.




இந்துஸ்தான் லீவர்
லிமிடெட்டின்
ஓர் உன்னத தயாரிப்பு



# மனிதனும் மிருகமும்

சென்னையில் சில மாதங்களாகச் சிறுவர் சிறுமியரிடையே ஏன், பெரியவர்களிடையேயும்தான் பெரும் பரபரப்பை உண்டு பண்ணிச் சமீபத்தில்தான் விடை பெற்றுச் சென்றிருக்கிறது 'கிரேட் ஓரியண்டல் சர்க்கஸ்'. இச்சந்தர்ப்பத்தில் பயங்கரமான வனவிலங்குகளை அவர்கள் எப்படிப் பழக்குகிறார்கள் என்ற ரகசியத்தை வெளியிடுவதில் தவறில்லை என்று எண்ணினோம். பொது நிர்வாகி ஆனந்தனையும் மிருகங்களைப் பழக்கிப் பயிற்சியளிக்கும் கேசவராஜ் அவர்களையும் பேட்டி கண்டபோது பல சுவாரசியமான விஷயங்களைத் தெரிந்து கொள்ள முடிந்தது.

இந்தச் சர்க்கஸ் நிறுவனத்தின் உரிமையாளர் திரு கே. கே. அச்சுதன்.

''மிஸ்டர் கேசவராஜ்! நீங்கள் வன விலங்குகளுடன் அன்யோன்யமாகவும் அதீத தோழமையுடன் பழகுகிறீர்கள். அவைகளை ஆட்டி வைக்கிறீர்கள். அவைகள் மனதில் எப்படி நீங்கள் பயத்தைத் தோற்றுவிக்கிறீர்கள்...?''

''நீங்கள் நினைப்பது தவறு. நாங்கள் பயத்தைத் தோற்றுவிப்பது இல்லை. அன்பைத்தான் தோற்றுவிக்கிறோம். ஒரு சிங்கத்தையோ, புலியையோ புதிதாகக் கொண்டு வந்தால், அதற்குக் குறிப்பிட்ட வேளைகளில் ஆகாரத்தையும் தண்ணீரையும் தினசரி கொடுக்க ஆரம்பிக்கிறேன். பத்து நாட்களில் அந்த மிருகம் என் குரல், தோற்றம் எல்லாவற்றையும் தன் மனத்தில் பதித்துக் கொண்டு விடுகிறது. அதன் பசி தீர்க்கும் ரட்சகன் என்று என்னை நினைக்கத் தொடங்குகிறது. மேலும் பத்து நாட்கள் தொடர்ந்து இதைச் செய்த பிறகு, நான் எப்போது அந்தப் பக்கம் போனாலும் ஆவலுடனும் நன்றியுடனும் கம்பிகளில் முகத்தைப் பதித்துப் பார்க்க ஆரம்பிக்கிறது. அந்த நன்றி உணர்ச்சி கடைசி வரை அவைகளின் உள்ளங்களிலே வளர்கிறது. மனிதனுக்கும் மிருகத்துக்கும் இங்கேதான் வித்தியாசம்.''

''பேஷ்! பேஷ்!... அப்புறம் அந்த மிருகங்களைப் பெரிய கம்பி அடைப்புக்களில் விட்டுவிட்டு, வித்தைகள் சொல்லிக் கொடுப்பீர்களாக்கும்?''

''பள்ளிக்கூடத்தில் பாடம் கற்றுக் கொடுப்பது போல் நினைத்து விட்டீர்களாக்கும்! அதுதான் இல்லை! அவைகளுக்குக் குறிப்பிட்ட உடல் அசைவு தோற்றுவிக்க ஆகாரத்தின் வாசனை உதவியை நாடுகிறேன். சர்க்கஸ் நடக்கும் நேரங்களில் நீங்கள் சிங்கமோ, புலியோ, மரியாதையாக ஸ்டூல், மேஜை மீது வந்து உட்காருவதைப் பார்க்கிறீர்கள் அல்லவா? இதன் ஆரம்ப கட்டம் எப்படித் தெரியுமா? அந்த மேஜை, ஸ்டூல் விளிம்புகளில் இறைச்சித் துண்டங்களை ஒட்ட வைத்து விட்டு அந்த மிருகங்களின் முன்னால் சற்றுத் தள்ளி வைப்பேன். அந்த ஸ்டூல், மேஜைகளை நோக்கி விரட்டுவேன். மோப்பம் பிடித்து அவைகள் தாவி உட்கார்ந்து இறைச்சியைத் தேடும். இப்படிப் பல நாட்கள் ஆன பிறகு வெறும் ஸ்டூலை முன்னால் வைத்துக் காட்டினாலும்கூடத் தாவி உட்கார்ந்து விடும்!

''யானை சலாம் போடுகிறதே! அது எப்படித் தெரியுமா? நீங்களெல்லாம் வேடிக்கை பார்க்க வந்திருக்கிறீர்கள்! உங்களுக்கு வரவேற்புக் கொடுக்க வேண்டும் என்பதற்காக அது தன் தும்பிக்கையை உயர்த்துகிறது என்று நினைக்கிறீர்களா? அதுதான் இல்லை! வெல்லமும் அரிசி மாவும் கலந்த உருண்டையை முதலில் தரை மட்டத்திலிருந்து தும்பிக்கையில் கொடுப்பேன். பிறகு சில நாட்கள் தொடர்ந்து அந்த



உருண்டையைக் கொஞ்சம் கொஞ்சமாக உயர்த்தி மேலே கொண்டு போய்க் கடைசியில் அந்த உருண்டையை அதன் நெற்றியிலேயே பதித்து விடுவேன். அந்த யானை தும்பிக் கையை உயர்த்தி அந்த உருண்டையை எடுத்து வாயில் போட்டுக் கொள்ளும். இந்தப் பலகார உருண்டையை அதன் முன் காண்பித்து உயர்த்தி உயர்த்திக் கொண்டு போகும் போது 'சலாம்' -சலாம்' என்பேன். அது அந்தப் பலகாரத்தின் பெயர்தான் சலாம் என்று நினைத்துக் கொள்ளுமோ என்னவோ? நமக்கு வேண்டியது அது தும்பிக்கையை உயர்த்த வேண்டியதுதானே.....! இப்படியே தினம் தினம் செய்து வந்தால் அதுவே பழகிப்போய் நாளடைவில் சலாம் என்றவுடன், கண் முன் உருண்டை




றும். அப்போதெல்லாம் கூரிய ஆணிகள் பதித்த இரும்புப் பந்தை ஒரு நீண்ட கம்பி நுனியில் பொருத்தி, அந்தப் பந்தைக் கால்களைத் தூக்கிச் சீறும் விலங்குகளின் முன் நீட்டுவேன். அந்த ஆணிப் பந்தை ஆக்ரோஷத்துடன் அடிக்கும். அப்போது பாதங்கள் ரணமாகி விடும். திருப்பித் திருப்பி இப்படிச் செய்வதின் மூலம், அவைகளுக்குப் பயம் வந்து கால்களைத் தூக்கித் தாக்க வருவதை நிறுத்திக் கொள்ளும். அப்புறம் சாதாரண சிறு பிரம்பை நீட்டினால்கூட அதில் இரும்புப் பந்து இருக்கிறதோ என்ற பிரமையில் கம்மா இருந்துவிடும். இந்த கிரேட் ஓரியண்டல் சர்க்கஸிலே மிருகங்களைப் பற்றி அதிக தூரம் அஞ்சுவதற்குக்





இருக்கிறதோ இல்லையோ, அது தும்பிக்கையைத் தூக்கும்.''

''சிங்கம் புலிகிட்டே கூட நீங்க யானை கிட்டே பழகுறே மாதிரி சகஜமாகப் பழக முடிகிறதா?

''சமயத்தில் மனோதத்துவ வைத்தியம் செய்ய வேண்டியிருக்கிறது. இந்தச் சிங்கம், புலிகள் எல்லாம் அவ்வளவு சுலபமாக மேஜை ஸ்டூல் மீ இரைச்சிக்காக உடம்பை அலட்டிக் கொள்ள மாட்டா ஆரம்பகாலத்தில்! கொஞ்சம் ஆவேசமாகக் கால்களைத் தூக்கி அடிக்க வரும் உணர்ச்சியும் அவைகளுக்குத் தோன்



காரணம் இல்லை. இங்கே இருக்கிற ஐம்பத்தி ஐந்து சிங்கம் புலிகளில் பெரும் பாலானவை இங்கேயே பிறந்து வளர்ந்தவை. இப்போது இங்கே வந்து முகாம் இட்ட பிறகு மூன்று சிங்கக் குட்டிகள் பிறந்திருக்கின்றன. சூழ்நிலையின் காரணமோ என்னவோ, பிறந்தவுடன் குட்டிகளுக்கு இந்த மிருகங்கள் பால் கொடுக்க மறுக்கும். அதற்காக முதல் இரண்டு மூன்று நாட்கள் ஆடுகளை வரவழைத்து அவைகளின் மடிக்களிலிருந்து சிங்கக் குட்டிகளைப்பால் குடிக்கச்



''நீங்க 'நோட்' பண்ணி யிருப் பேளோ! என்னிடம் இருக்கிற பல நற் குணங்களில் அற்புதமான குணம் பிறரைப் பற்றிக் குறை கூறி நான் ஒரு வார்த்தை பேசுவதில்லே.''

''அதற்கு உங்களுக்கு அவகாசம் ஏது? உங்களைப் பற்றியேதானே நீங்க எப்பவும் பேசிண்டிருக்கேள்!'' கூ.

செய்வோம். இதைப் பார்த்துக் கொண்டே யிருக்கும் அந்த வனவிலங்குகள் தாங்களா கவே பால் கொடுக்க ஆரம்பித்து விடும்.''

''உங்கள் ஒருவருடன தான் இந்த வன விலங்குகள் அன்போடும் அமைதியோடும் பழகுகின்றன என்பதால், நீங்கள் எந்த அவசர வேலையை முன்னிட்டும் இவைகளை விட்டு விட்டுப் போக முடியாதல்லவா?''

''அப்படிச் சொல்வதற்கில்லே. கூண்டு களைத் தினசரி கழுவி விடும் சிப்பந்திகளை யும் அவைகள் நன்கு தெரிந்து வைத்துக் கொள்கின்றன. அவர்களிடமும் அன்புடனும் அமைதியுடனும் பழகுகின்றன. இதற்கு ஓர் உதாரணமான ஒரு சம்பவம்கூட எனக்கு நினைவு வருகிறது. லக்நோவிலே புதிதாக நிறுவப்பட்ட சர்க்கஸ் கம்பெனி ஒன்று முகாமிட்டிருந்தது. ஒரு நாள் மாலை நிகழ்ச் சிக்குப் பிரபல அழைப்பாளர்களெல்லாம் வந் திருந்தார்கள். ஆட்டம் ஆரம்பமாகி நடந்து கொண்டிருந்தது. மிருகங்கள் வரும் காட்சி. அந்த ரிங்மாஸ்டருக்கு என்ன போதாத வேளையோ தெரியவில்லை! கம்பி வேலிக்குள் ளிருந்த நான்கைந்து சிங்கங்களும் அவர் மேல் ஆக்ரோஷத்துடன் பாய்ந்து தாக்க ஆரம்பித்து விட்டன. பார்க்க வந்தவர்கள் பயந்து மிரண்டு ஓட ஆரம்பித்து விட் டார்கள். ஒரே அமளி துமளி. அந்த நேரத்தில் தான் மிருகக் கூண்டுகளைக் கழுவிவிடும் ஆசாமி எதிர்பாராத விதமாகக் கம்பிகளின் வழி யாக ஏறி உள்ளே குதித்து ஓர் அதட்டல் போட்டான். அத்தனை மிருகங்களும் சாது வாகத் தங்கள் தங்கள் ஸ்டூல்களில் போய் உட்கார்ந்து விட்டன. ரிங் மாஸ்டர் உயிர் தப்பியது. ஆனால் ஆறு மாத காலம் வரை அவர் ஆஸ்பத்திரியில் பலத்த கட்டுகளுடன் இருக்க வேண்டியதாயிற்று.

''இன்னொரு விஷயம். இந்த மாதிரி ஓரளவு பழகிப் போன மிருகங்கள், சந்தர்ப்பம் கிடைத் தால் கொஞ்ச தூரம் சுதந்திரமாக ஓடும். அப் புறம் தன்னாலே சாதுவாகத் திரும்பி விடும்.''

''அப்படியா? பயங்கர வன விலங்குகள் ஊருக்குள் தப்பி ஓடி விட்டால் எல்லோருக்கும் கிலி பிடித்துக் கொள்ளுமே? ரொம்ப ஆபத்தான காரியமாயிற்றே?''

''நான் வொயிட்வே சர்க்கஸில் இருந்த காலம். திரு ஆனந்தனும் அப்போ அங்கே தான் பணியாற்றி வந்தார். ஒரு நாள், நாங்கள் பஞ்சாபில் உள்ள ஹோஷியார் பூரில் முகாமிட்டிருக்கும்போது எப்படியோ ஆட்டம் நடந்து கொண்டிருக்கையில் நாலு சிங்கங்கள் சேர்ந்தாற்போல் ஜாலியாகக் கொட்டகையிலிருந்து ஊருக்குள் கிளம்பி விட்டன. ஒரே அமர்க்களம். போலீஸார் அவைகளைக் கண்ட இடத்தில் சுட்டுத் தள்ளப்போவதாகவும் சர்க்கஸ் லைசென்ஸை உடனடியாக ரத்து செய்யப் போவதாகவும் மிரட்டினார்கள். நான் ஒரு மணி நேர அவ காசம் கேட்டுக் கொண்டு கிளம்பினேன். ஒரு சிங்கம் ஜி. பி. ஓ. வாசலுக்கே போய்விட்டது. ஒரு மணி நேரத்துக்குள் நாலு சிங்கங்களையும் தாஜா செய்து கொண்டு வந்து விட்டேன்.

''அதே சர்க்கஸ்தான். வடக்கே வேறு ஓர் ஊரில் ஒரு நாள் ஒரு சிங்கம் தனிமையில் கிளம்பி விட்டது. டேரா வுக்கு வெளியே ஒரே இருட்டு. ஆங்காங்கு புதரும் உண்டு. காவல் நாய் இந்தச் சிங்கத்தைத் தொடர்ந்து ஓடியிருக்கிறது. கடைசியில் நாயும் அதைக் கோட்டை விட்டுத் திரும்பியது. ஊர்க்காரர்கள் எல் லாரும் பயத்தால் கதவை மூடிக் கொண்டு உள்ளே தங்கிவிட்டார்கள். கடைசியில் அந்தச் சிங்கம் ஒரு பாழடைந்த கோவிலின் கர்ப்பக்கிருகத்துக்குப் பக்கத்தில் படுத்துக் கிடப்பதை டார்ச் விளக்கின் ஒளி மூலம் கண்டோம். தப்பிச் செல்ல இரண்டாவது வழியே இல்லாத கோயில் கர்ப்பக்கிருகத் துக்குள்ளே போய் அதை நான் அழைத்து வருவதைப் பலர் ஆட்சேபித்தார்கள். ஆனால் நான் துணிவுடன் உள்ளே சென்று கூப்பிட்டேன். குழந்தை மாதிரி பின்னா லேயே வந்துவிட்டது. இதிலெல்லாம் மனோ தத்துவம்தான் முக்கியம். நாம் பயப்படுவது போல் காண்பித்துக் கொள்ளக்கூடாது!''

''என்ன மிஸ்டர் ஆனந்தன்! நீங்கள் இந்தச் சர்க்கஸ் தொழிலைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள்?''

''சர்க்கார் இந்தத் தொழிலுக்குப் பல சௌகரியங்கள் செய்து கொடுக்கிறார்கள். சென்னை ராஜ்யத்தைப் பொறுத்தவரை தமாஷா வரி கிடையாது என்பது உற்சாகம் அளிக்கக் கூடிய விஷயம். சர்க்கஸ் கலைஞர் களுக்கு இன்ஷூரன்ஸ் சலுகை கிடையாது. ஆனால் சர்க்கஸ் தொழிலுக்கு இன்கம்டாக்ஸ் தொல்லை உண்டு!''

—மோனா



# வலிதான் எங்கள் பிரச்சினை...

## உங்களுக்கு நாங்கள் உதவக்கூடிய விதம் இதுதான்!

**ஆராய்ச்சி:** 'ஆஸ்ப்ரோ' ஆராய்ச்சிக் கழகத்தில் ஒரு ஆராய்ச்சிக் குழுவின் தலைமை வகிப்பவன் நான். எங்களுடைய பணி வலியை நீக்க மேன்மேலும் சிறந்த முறையைக் கண்டுபிடிப்பதே. இந்தப் பிரச்சினையில் ஆழ்ந்த ஊக்கம் கொண்டுள்ள உலகத்தின் முதன்மையான பல கழகங்களுள் எங்களுடையதும் ஒன்று. வலிக்கு, இக்காலத்தில், சிறந்த ஒரே விடை 'ஆஸ்ப்ரோ' பார்முலா தான் என்பதை நாங்கள் இன்று அறிவோம்.

சமீபத்தில், அமெரிக்க அரசாங்கத்தின் ஆதரவில் நடைபெற்ற சோதனைகள் 'ஆஸ்ப்ரோ' விலுள்ள சுறுசுறுப்பாக இயங்கும் கூட்டுப் பொருள்தான் மிகவும் துரிதமான மற்றும் பயனுள்ள வலி நிவாரணி என்று தெளிவாக நிரூபித்துள்ளன. அதனால்தான் அது உலக முழுவதும் உள்ள டாக்டர்களாலும் ஆஸ்பத்திரிகளிலும் பயன்படுத்தப்படுகிறது.

**வலி என்பது என்ன?** உயிர்ப்பொருள், உடல் வேகத்திற்கும் மேலாக, மிக விரைவாகத் திசுக்களில் சேர்ந்து குவிந்து, ஒரு ''மறைமுகமான'' வீக்கத்திற்குக் காரணமாகிவிட, அது நரம்புகளை அழுத்துவதின் மூலம் வலி ஏற்படுகிறது.

**'ஆஸ்ப்ரோ' இயங்குவது எப்படி?** 'ஆஸ்ப்ரோ' உடனடியாக இரண்டறக் கலந்துவிடுகிறது—வீக்கத்தை நீக்கி—நரம்புகளின் மீதிருக்கும் அழுத்தத்தைப் போக்கி—வலியை வெளியே இழுத்துவிடுகிறது.

**இவைகளுக்கு 'ஆஸ்ப்ரோ' சாப்பிடுங்கள்:** வலி • தலை வலி • உடல் வலி • பல் வலி • மூட்டு வலி • ஜுரவேகத்துடன்கூடிய ஜலதோஷம் • ஃப்ளு • டெங்கு.




**அளவு:**

**பெரியவர்கள்:** இரண்டு மாத்திரைகள். தேவையானால் மீண்டும் இதே அளவில் உபயோகிக்கவும்.

**குழந்தைகள்:** ஒரு மாத்திரை அல்லது உங்கள் டாக்டரின் சொல்படி.

A.G.26.66 TAM

# 'ஆஸ்ப்ரோ' வலியை வெளியே இழுத்துவிடுகிறது!



## "சீஸனுக்கு எந்த ஊர்?"

வருஷம்தோறும் கேட்பவை:

மார்ச்சு மாதம்: "உஷ்! அப்பாடா! இப்பவே இப்படிக் கொளுத்தறதே. இன்னும் போகப் போக எப்படிச் சமாளிக்கிறது?"

ஏப்ரல் மாதம்: "சீஸனுக்கு எங்கே ஸார்? ஊட்டியா கொடைக்கானலா?"

"எங்கே ஸார்! ஆபீஸிலே லீவு கொடுக்கமாட்டேன்னு சொல்லி இழுவடிக்கிறான்."

"லீவு கொடுத்தால் ஆயிற்றா? கூடவே இரண்டு மாச போனஸையும் கொடுத்தனுப்பினால் 'ஸம்மரு'க்கு எங்கேயாவது ஜாலியாப் போயிட்டு வரலாம்!"

மே மாதம்: "இன்னைக்கு எத்தனை டிகிரின்னு போட்டிருக்கான் பேப்பரிலே? அக்னி நட்சத்திரம் என்னிலேருந்து?"

ஜூன் மாதம்: "போன வருஷம் தேவலாம் ஸார்! உஷ் அப்பா! பொறுக்க முடியலே! ஃபைல் கட்டைத் தூக்கி மேஜை மேலே வைத்துக் கொள்ளும். தரையில் ஒரு பக்கெட் தண்ணீரைக் கொட்டி ஃபானைத் திருப்பி விடப் போகிறேன்!"

கோடைக் கானலுக்கு எல்லோராலும் போய்விட முடியாது என்பதற்காகக் கொடைக்கானலை உங்கள் வீட்டிற்கு வரச் செய்திருக்கிறோம் இந்த வாரம்.

போட்டோ: ராமக்ருஷ்ணா

1. பிரயண்ட் பூங்கா. பலவித ரோஜாக்களுள்ள பூங்கா.
2. நடிகர் ஜெமினி கணேசன் பங்களாவிலுள்ள 'லீப் பிங் வில்லோ' என்ற உயரமான பழமை மிக்க மரம்.
3. பெருமாள் மலை.
4. கொடைக்கானல் ஏரியும், போட்கிளப்பும்.
5. ஸில்வர் கேஸ்கேட் என்ற அருவி.
6. பில்லர் ராக்ஸ் என்ற இரட்டைப் பாறைகள்.



# வசீகரத்தையும், பெருமிதத்தையும் கொடுக்கும் நறுமணம் உங்களுக்கு பாமாலிவ் லவண்டர் டால்க் உபயோகிப்பதால்.

**உங்களுக்கு மிகவும் பிடித்தமான ஸெண்டுகள்—உங்களுக்காகவே மீண்டும் உருவாக்கப்பட்டிருக்கின்றன!**

ஒரு காலத்தில் உலக அழகுக் கேந்திரங்களிலிருந்து இறக்குமதி செய்யப்பட்டவையும், உங்களுக்கு மிகவும் பிடித்தமானவையுமான ஸெண்டுகளின்றி இனி நீங்கள் தவிக்கவேண்டாம்... இன்று பாமாலிவ் லவண்டர் டால்க் மட்டுமே அளிக்கும் வசீகர நறுமணத்தினாலும், பெருமிதத்தினாலும் உங்கள் உடலைச் சொகுசாகப் பராமரிக்க முடியும். பாமாலிவ் லவண்டரை உங்கள் உடம்பு முழுவதும் தூவிக் கொண்டு, சூழ்ந்து நிற்கும் அதன் இனிய வசீகர நறுமணத்தினால் களிப்படையுங்கள்.

**எப்பொழுதும் புத்துணர்ச்சியுடனும் நறுமணம் சூழ்ந்த அழகுடனுமிருக்க பாமாலிவ் லவண்டர் டால்க்.**









மற்றும் பாமாலிவ் டால்க் டீலக்ஸ் —
மயக்கும் 17 ஸெண்டுகளின் அற்புதமான கல

PT.G.8 TAM.



## யார் நீ?

பயங்கர இரவு. மழைத் தூறல். கதாநாயகன் டாக்டர் ஆனந்த் காருக் கெதிரே வெள்ளை உடையில் அழகான பெண். 'யார்நீ?' என்கிறான் ஆனந்த். அவள் வாழ்க்கையை விளக்காது கடுங்காட்டுக்குள் நுழைகிறாள். அவள் பேயா? பிசாசா? இல்லை, அவன் வாழ்க்கையைப் பயங்கரமாக்க வந்த பேயுருவில் வந்த பெண். இரட்டை உருவப் பிரச்னையும், மர்ம மாளிகையும், அவளது கடுங்காட்டு வாழ்க்கையும், பணத்தாசை பிடித்த ஆனந்தின் உறவினன் தீட்டிய சதித் திட்டமும் டாக்டர் ஆனந்தின் வாழ்க்கையைப் பாழ்படுத்துகின்றன, சஸ்பென்ஸ் உருவில்.

இந்த சஸ்பென்ஸை நாம் கடைசியில் தெரிந்து கொள்வதற்குள் நம் நெற்றி நரம்பைப் புடைத்தெழச் செய்து விடுகிறார்கள். கதாநாயகன் ஜெய்சங்கரும், கதாநாயகி ஜெயலலிதாவும் ஒரு மர்ம மாளிகையில் நடக்கிறார்கள், நடக்கிறார்கள்; அப்படி நடக்கிறார்கள் ; சஸ்பென்ஸைக் கூட்டுதலாக்க. ஆனால் நம் பொறுமை பெரிதும் சோதிக்கப்பட்டு விடுகிறது. 'வஹ் கௌன் தீ?' என்ற ஹிந்திப் படத்தின் தமிழாக்கம் 'யார் நீ?'. இந்திப் படக்காரர்கள் பதித்துவைக்கிற பாட்டில் முக்கால்வாசியாவது நம்மைப்பதற வைக்க வேண்டாமா ?

காமிரா நிபுணர் சுப்பாராவ் இந்த மர்மக் கதையைப் படமாக்கி யிருக்கும் விதம் பாராட்டத் தக்கது. தூக்கிய நடிகர்கள் வீரப்பனும், மனோரமாவும் டாக்டர் ஆனந்தின் வீட்டில் பயந்து போகும்படி மண்டை ஓடு இருக்கும் அங்கும் நகருகிறது. பிறகு அதன் அசைவுக்குக் காரணமான எலி ஓடும் காட்சி நன்கு சித்திரிக்கப்பட்டுள்ளது.

இரட்டை உருவில் தோன்றும் ஜெயலலிதாவும், டாக்டர் ஆனந்தாக வரும் ஜெய்சங்கரும் தங்கள் நடிப்பால் மர்மக் கதைக்குக் கொஞ்சம் உயிரூட்டி யிருக்கிறார்கள். கத்தரிக்கோலைக் கொஞ்சம் தாராளமாகக் கையாண்டிருந்தால் மர்மக் கதை அற்புதத் தட்டாதபடியிருந்திருக்கும். ஆனால் 'மாஸ் அப்பீல்' நினைவுக்கு வந்து வேண்டாத நடனங்களைப் புகுத்தி விடுகிறதே, அதற்கு என்ன செய்வது?

***

## சாது மிரண்டால்

ஒரு நல்ல மனிதன்; நேர்மையும், நாணயமுமே அவனது குறிக்கோள். அந்தக் குறிக்கோள் காரணமாகவே அவன் வேலை பார்த்து வந்த பாங்கியில் அவனுக்கு ரொம்ப நல்ல பெயர், அவனுக்குப் பெரிய சோதனை அவனது பால்ய நண்பன் ரூபத்தில் வந்து தொலைகிறது. அந்த நண்பன் ஓர் அயோக்கியன். அவனால் நல்ல மனிதனின் வாழ்க்கை பாழாக இருந்தும், கடைசி வரையில் தன் லட்சியத்தைக் கைவிடாத அவனது அருங்குணம் காரணமாக நல்லவனுக்கே வெற்றி கிட்டுகிறது. அந்த மாபெரும் வெற்றிக்குத் தன்னையுமறியாமல் உறுதுணையாயிருப்பவன் டாக்ஸி டிரைவர் கபாலி.

டாக்ஸி டிரைவராக வரும் நாகேஷ் படம் முழுவதும் வந்து எல்லாரையும் சிரிக்க வைக்கிறார்; குழந்தைகளோடு நடனமாடி மகிழ்விக்கிறார்; மனோரமாவோடு காதல் சாகஸங்கள் புரிந்து யாவரையும் கவர்ந்துவிடுகிறார்; டாக்ஸியில் விதம்விதமான மனிதர்களை ஏற்றிக் கொண்டு போய்த் தமக்கெனப் படத்தில் தனியிடம் தேடிக் கொண்டு விடுகிறார். சபாஷ் நாகேஷ் !

காஷியர் பசுபதியாக, நல்ல மனிதனாக வரும் டி. ஆர். ராமச்சந்திரன் அந்தப் பாத்திரத்துக்குத் தனி மெருகேற்றி விடுகிறார். குழந்தைகளோடு பழகும் போதும், ஆபிஸில் வேலை பார்க்கும் போதும், கடைசியில் நண்பனின் துரோகச் செயலின் காரணமாகப் பாங்கிப் பணம் குறையாடப்பட்டதை அறிந்து பணப் பெட்டியைப் பிடுங்கி, அயோக்கியனோடு போராடி அவனைக் கொன்று பணத்தைக் காப்பாற்றிய போதும் அவர் நடிப்பு குறையின்றி விளங்குகிறது.

குட்டி பத்மினியும், மாஸ்டர் பிரபாகரும் ரொம்ப அழகாக நடித்திருக்கிறார்கள்.

''சாது மிரண்டால்'' ஒரு மர்மக் கதை. எதிர்பாராதவிதமாகக் கொலையுண்ட ஒரு மனிதப் பிரேதத்துடன் டாக்ஸியில் ஊர்வலம் வருவது நடக்கக் கூடாததாயிருந்தாலும் விரஸமாயில்லையே! ஆனாலும் கதையில் ஆங்கில வாடை வீசுவதைத் தவிர்க்க முடியவில்லை.

வில்லனாக வரும் ஓ. ஏ. கே. தேவர் மிகவும் நன்றாக நடிக்கிறார்.

சமீபத்தில் வெளி வந்த படங்களில் ஸன் பீம்ஸாரின் ''சாது மிரண்டால்'' முற்றிலும் புது மாதிரியாயிருக்கிறது. ஒரு நல்ல மனிதனைக் கொடுமைக்குள்ளாக்கினால் அவனுடைய சாதுத் தன்மை மாறிச் சீறிப் பாயும் தன்மை தானே வந்து விடும் என்பது தான் கதையின் கருத்து. அதை நன்றாய் விளக்குகிறது படம்.




இப்பொழுது
நடைபெறுகிறது
சென்னை
சித்ரா · கிரௌன்
புவனேசுவரி
மற்றும் தென்னாடெங்கும்
ஸ்ரீ
வெங்கடேஸ்வரா சினிபோன்
அளிக்கும்
சன் பீம் ஸாரின்
சாது
மிரண்டால்...
நவீன ஹாஸ்ய சித்திரம்....
திரைக்கதை
A. பீம்சிங்
டைரக்ஷன்: திருமலை · மகாலிங்கம்
SEMBI



மேற்கு ஜெர்மனியில் ஹனோவர் நகரில் ஆண்டுதோறும் நடக்கும் தொழிலியல் கண்காட்சி, உலகப் பிரசித்தி பெற்றது. இக் கண்காட்சியைக் காண வருகிறவர்கள், தங்கள் கார்களை நிறுத்த விஸ்தாரமான மைதானம் ஒதுக்கப்பட்டிருக்கிறது. கண்காட்சி மைதானத்தைவிட இது பெரியது. இங்கு 44,000 கார்களை நிறுத்தலாம். கடந்த ஆண்டு கண்காட்சியின் போது கார்கள் நிறுத்திவைக்கப்பட்ட காட்சியைப் படத்தில் காணலாம். —யூ.பி.எஸ்.

**கதிரவனைக் கவிபாடிய கவிஞர்**

**ப**ள்ளி ஆசிரியர் ஒருவர் உல்லாசப் பயணத்துக்கு மாணவர்களை அழைத்துச் சென்றார். அவர் கிழக்கே உதித்த கதிரவனைப் பார்த்து, "மாணவர்களே, ஆளுக்கொரு வரியாக இக்கதிரவனைப் பற்றிச் சொல்லுங்கள், பார்ப்போம்" என்றார்.

உடனே ஒவ்வொரு மாணவனும் ஒவ்வொரு வரி சொன்னான், கதிரவனைப் பற்றி. அவர்களில் ஒருவன்,

"தங்கம் உருக்கி, தழல் குறைத்து
எங்கும் பரப்பியதோர் இங்கிதமோ?"

என்றான். ஆசிரியர் அசந்து போனார். அவனைப் பிடித்துத் தட்டிக் கொடுத்தார். அந்த மாணவன் யார் தெரியுமா?

(விடை: 44ம் பக்கம்) தகவல்: ஓமலூர் இரா. சங்கரன்

## வழிப் போக்கனும் பையனும்



**வழிப்போக்கன்:** தம்பி, இந்த மாட்டைக் கொஞ்சம் பிடித்துக் கொள். அதோ, அந்தக் குளத்தில் தண்ணீர் குடித்துவிட்டு வந்து விடுகிறேன்.

**பையன்:** மாடு முட்டுமா?

**வ. போ.:** முட்டாது.

**பையன்:** உதைக்குமா?

**வ. போ.:** அந்தப் பழக்கமே கிடையாது.

**பையன்:** இழுக்குமா?

**வ. போ.:** இதுவரையிலும் கிடையாது.

**பையன்:** ஓடுமா?

**வ. போ.:** சாதுவான மாடப்பா இது.

**பையன்:** பிறகு எதற்கய்யா இந்த மாட்டை நான் பிடித்துக் கொள்ள வேண்டும்? பேசாமல் இங்கேயே விட்டு விட்டு நீர் போய்த் தண்ணீர் குடித்துவிட்டு வாரும்.

**வ. போ.:** ....?....?....?....?

- பாண்டுரங்கன்

## நகரசபையில் வேலை செய்யும் பூனைகள்!

பிரிட்டனில் சர்ரே மாநிலத்தில் 'ரெட் ஹில்' என்ற நகரத்தில் உள்ள நகர சபையில் ஒன்பது பூனைகள் வேலை செய்கின்றன! நகரசபையின் சம்பளப் பட்டியலில் இந்தப் பூனைகளின் பெயர்கள் காணப்படுகின்றன.

நகரசபைக்குச் சொந்தமான கிடங்கு ஒன்றில் இப் பூனைகள் கடுமையாக உழைக்கின்றன. ஓடியாடி, பதுங்கியிருந்து பாய்ந்து, எலிகளைப் பிடிப்பதுதான் இப் பூனைகளின் வேலை! சம்பளம் கிடைக்கவில்லையென்றால், பூனைகள் வேலைக்கு வருவதில்லை. ஏனெனில், பூனைகளுக்குப் பதிலாகக் கையெழுத்திட்டுச் சம்பளம் வாங்கும் காவலாளி, அந்தப் பணத்திலிருந்துதானே பூனைகளுக்குப் பால் வாங்கி ஊற்றுகிறார்! தினசரி ஒழுங்காகப் பால் ஊற்றவில்லை என்றால், பூனைகள், "டிமிக்கி" கொடுத்து வேறு எங்கேயாவது சென்று விடுகின்றன என்கிறார் காவலாளி!

ஆதாரம்: டெய்லி மிர்ரர்.
தகவல்: கே. சுதர்ஸ்.

## எண்ணித் துணிக கருமம்

1. ஒரு பெட்டியில் நான்கு மாம்பழங்கள் இருக்கின்றன. நான்கு பேர்களுக்கு, பெட்டியில் ஒன்று இருக்கும்படி, பங்கு வையுங்கள்.

2. 19-லிருந்து 1-ஐ எடுத்து 20-ஆக்க முடியுமா?

3. நான்கு 9-ஐ உபயோகித்து 20 எழுதுங்கள் பார்ப்போம்.

4. 55-ஐ 5 நான்குகளை உபயோகித்து எழுதுங்களேன்.

5. 11-ம், 2-ம் 1-ஐத் தருமா?

6. பிறருக்குக் கொடுத்து உங்களால் காப்பாற்ற முடிவது எது?

(விடை: 44ம் பக்கம்)

"சார்! கொஞ்ச நேரத்துக்கு முன்னாலே நீங்கள் ஐம்பது ரூபாய்க்குச் சில்லறை கொடுத்தீர்கள். ஞாபகம் இருக்கா?"

"ஆமாம்! அது சரியாக இல்லையோ! உடனே சொல்லியிருந்தால் சரியாகக் கொடுத்திருப்பேன். இனிமேல் ஒத்துக்கொள்ள முடியாது, போங்கள்!"

"இரண்டு ரூபாய் அதிகமாகக் கொடுத்திருக்கிறீர்கள். நான் போயிட்டு வரேன்!"



## கரன்ஸி நோட்டு தோன்றிய கதை



கரன்ஸி நோட்டு வெளியிட்ட முதல் நாடு சீனா. ஆனால் திட்டவட்டமான ஓர் உருவத்தைக் கரன்ஸி நோட்டுக்குக் கொடுத்து வங்கிகள் வாயிலாக அச்சிட்டது சுவீடனில்தான். 'ஸ்டாக் ஹோம்ஸ் பாங்கோ' என்ற சுவிடிஷ் வங்கி 1661ல் நோட்டுக்களை அச்சிட்டு வழங்கியது. அளவுகடந்து அச்சிட்டதால் அல்லல் பல விளைந்தன. அதன் பிறகுதான் 1668ல் வங்கி வெளியிடும் நோட்டின் அளவை அரசினர் வரையறை செய்வது, அதற்கென ரிசர்வ் வங்கி ஒன்றை நிறுவுவது, அந்த வங்கிக்கு உரிமை வழங்குவது என்ற ஏற்பாடு சுவீடனில் அமுலுக்கு வந்தது. இன்று உலகெங்கும் வழக்கிலுள்ள நாணய வெளியீட்டு முறை இதுவே.

—தகவல்: காழி ஜெயா



சென்னை
வெலிங்டன் • பிரபாத் • சரஸ்வதி
மற்றும் தென்னாடெங்கும்
பி.எஸ்.வி. பிக்சர்ஸ்
யார் நீ?
திரைக்கதை, வசனம் • பாடல்கள்
M.K.ராமு • கண்ணதாசன்
இசை வேதா • காமிரா W.R.சுப்பாராவ் • கலை A.K.பொன்னுசாமி •
எடிட்டிங் S.A.முருகேஷ் • ஸ்டில்ஸ் C.பத்மநாபன் • ஸ்டூடியோ 'பரணி'
SEMBI
டைரக்‌ஷன் • சத்யம்
தயாரிப்பு • P.S.வீரப்பா

# அப்ஸரஸ்





திருவாளர் சுந்தரம்பிள்ளை, இந்தியப் பெண் மணிகள் சிலர் இமயத்துச் சிகரம் ஒன்றை எட்டிப் பிடித்த சாகஸத்தைப் பேப்பரில் படித்தார். அவரது மூளை சுறுசுறுப்படைந்தது. கவர்னர், குமாஸ்தா, ஐ.ஏ.எஸ் அதிகாரி, விமான உபசரிணி, மந்திரி(ணி) இவ்வாறு பார்க்குமிடமெங்கும் நீக்கமற நிறைந்துள்ள பெண்கள்! புரட்சி சுந்தரம் பிள்ளையின் மனத்தில் 'ஐடியா'ப் புயல் வீசிற்று.

என்னைத் தேடி வந்தார்.

''பாரில் பெண்கள் எத்தனையோ தொழில்கள் நடத்த வந்தபோது ஹோட்டல் மட்டும் விதிவிலக்கா? புதுமைக்காக ஒரு முயற்சி, என்ன சொல்கிறீர்கள்?''

''ஸ்வீட்டான ஐடியா! பெண்மை வாழ்க!'' என்று கோஷமிட்டேன். பாங்குள்ள பாவைகளே பரிபாலிக்கும் பெண்கள் பாங்கிலிருந்து பணத்தை எடுத்து அதை முதலாக வைத்து ஆரம்பித்தார்!

ஹோட்டல் அப்ஸரஸ் வனதேவதை போல் அந்தத் தெருவில் தோன்றிய பிறகு அது ஒரு யாத்திரை ஸ்தலமாகவே மாறிவிட்டது. எத்தனையோ முதலாளிகள் அந்த இடத்தில் புதுப்புதுப் பெயருடன் ஹோட்டல் ஆரம்பித்து ஒவ்வொரு முறையும் புது வர்ணம் பூசி, பூஜை போட்டு நன்றாகத்தான் தொடங்கினார்கள். ஆனால் கல்லாப் பெட்டியில் அமர்ந்து தொழில் நடத்தியவர்களெல்லாம் சொல்லாமல் ஊசிப் போன பண்டம்போல் உளுத்துப் போயிருக்கிறார்கள். இருந்தாலும், துணிந்து அந்த இடத்தில் 'அப்ஸரஸ்' புதிய அவதாரம் எடுத்திருப்பது சுந்தரம்பிள்ளையின் துணிகரமான முயற்சி என்றே சொல்ல வேண்டும். அடுக்கி வைக்கப்பட்ட மைசூர்ப் பாகுக் கட்டிகள் போல் அந்த இடத்துக்கே புதிய தோற்றம் உண்டாகி யிருந்தது.

மேசையடியில் வீற்றிருக்கும் முதலாளி சுந்தரத் தின் இந்திர உருவம் ஒன்றுதான் ஆண்! அந்த ஹாலில் காணப்படும் காலண்டர் படங்கள் உள்பட எல்லாமே பெண் மயம். முதலாளி மேசை மீது மின் விசிறிக் காற்றுக்கு ஏற்பக் கழுத்தை வெட்டி, உடலை

ஹோட்டல் அப்ஸரஸ் வனதேவதை போல் அந்தத் தெருவில் தோன்றியபிறகு அது ஒரு யாத்திரை ஸ்தலமாயிற்று. ஆனால் ஹோட்டல் அதிபர் சுந்தரம்பிள்ளை என்ன ஆனார் தெரியுமா?

சுபஸ்ரீ

அசைந்து ஆடும் நாட்டியப்பதுமையும் பெண்ணினம்தான்!

உள்ளே போய் நாம் அமர்ந்தவுடன் வேட்டியை அளவுக்கு மீறியே மடித்துக் கட்டி, காதில் பென்சில் துருத்தி நிற்க, ஒரு சர்வர் வந்து உங்கள் முன் காட்சி அளித்துக் கட்டைக் குரலில், அன்று விதித்த பலகார ஜாபிதாவை ஒப்புவிப்பான் என்று நீங்கள் எதிர்பார்த்தால், காத்துக் கிடந்தவன் மசால் தோசையை இப்பொழுது வந்தவன் அடித்துக் கொண்டு போனதுபோல் ஏமாற்றம் உங்களுக்கு ஏற்படக் கூடும்.

விண்ணிலிருந்து மேக மதை விண்டெடுத்தது போன்று இளம் ஊதா நிற வெங்காயச் சருகுச் சேலை அணிந்து, காப்பி ஏந்திய நுரை போன்ற வெண் சிப்புத் தாங்கி. கோதுமை ஹல்வா வண்ண மேனியுடன் காட்சியளிக்கும் பெண்மணி 'கஸ்டமரோ' என்று எண்ணுகிறீர்கள். அப்சரஸின் அன்புப் பணிப் பெண். முறுகல் ரவாதோசையின் கம்பீரமும், குலாப்ஜாமூனின் இனிமையும் கலந்த நிறைவோடு, வெல்லும் வெண் நகையுடன் அவர்கள் அளிக்கும் காட்சியே கண்ணை நிறைத்துப் பாதி வயிற்றையும் நிறைத்து விடுகிறது. மேஜையின்மீது கோணல் கையை ஊன்றியபடி, ''சாருக்குப் போண்டா சாம்பாரா?'' என்ற பழைய அநாகரிகக் கேள்விகள் அங்கு எழுவதில்லை. பெண் சர்வர் நிற்கின்ற குழைவான லாகவத்தை எண்ணி, 'அது குச்சிப்புடியா, — வழுவூர்ப் பாணியா?' என்ற ஆராய்ச்சியில் ஈடுபட்டு, தீர்மானிக்க முடியாமல் திண்டாடும் போதுதான் அன்றையச் சிற்றுண்டிகளின் ஜாபிதா சுத்த சங்கீதம்





போல் காதில் விழத் தொடங்குகிறது. நாரதர் கானமோ, நாதம்தான் வீணையோ என்று ஐயுற்றபடி பலகாரச் சொல்லடுக்கு ஸ்வீட்டாகக் காதில் கேட்கும்போது அது மூன்று நாட்களுக்கு முன்பு செய்ததாக இருந்தால் கூட 'முதல் தரம்' என்றே நினைக்கத் தூண்டுகிறது. போய்ப் பண்டமும் நெய்ப் பண்டமாகத் தோன்றுகிறது.

ஆகா, பலகாரங்களின் பெயர்களில்கூட என்ன இலக்கியச் சுவை. வளையாபதி தோசை (முறுகல் தன்மையால்!) கண்ணகி இட்லி (எரிந்த மதுரை போல் வெந்த இட்லி) மாதவி வெஜிடபிள் பாத் (வண்ணம் காரணமாக) அல்லி ஆப்பம், வள்ளி வடை, ரம்பா பாதுஷா, தேவிகா கூல்டிரிங்க், சாவித்திரி ஐஸ்கிரீம்..... இயலான ருசியும், இலக்கியச் சுவையும் சொட்டும் அவற்றைச் சாப்பிட்டவர்கள் 'மனிதப் பிறவியும்' வேண்டினர்.

''எதைச் சாப்பிடுவது, எதற்கு ஆர்டர் கொடுப்பது?'' என்று பேச்சடைத்துப் போன நிலையில், ''உங்கள் உடல்நிலைக்குப் பாதம்கீர் சாப்பிடுங்கள்'' என்ற அன்பான சிபாரிசு உபசரிணியிடமிருந்தே எழுகிறது. அந்தப் 'பர்ஸனல் டச்' நம்மைத் தயிர் வடையின் தன்மையுடன் குளுகுளுக்கச் செய்கிறது. 'ஆஹா' என்று சொல்லி வைக்கிறோம். சிந்தாமல், சிணுங்காமல், வழி என்று கூப்பாடு போடாமல், ட்ரேயில் பாதம்கீர் ஏந்தி, இட்ட அடியும் எடுத்த அடியும் நடனமாட நடந்து வரும் அழகு ஒன்றே போதுமே. அது 'நங்'கென்று டேபிள் மீது 'லான்டு' ஆகவில்லை. அது நளினமாகச் சுழன்று, வளையல் கரங்கள் சப்திக்க வழங்கப்படும் போது ஒரு குடும்ப நினைவுடன் சாப்பிடத் தூண்டுகிறது. விஜயம் செய்யும் ஒவ்வொருவருக்கும் கிடைப்பது 'பர்ஸனல் அட்டென்ஷன்!' பசிப்பிணி தீர்க்கும் பண்புடைமை அவர்களுடையது. உபசரிப்புடன் (சிறு)உண்டி கொடுத்தோரை உயிர் கொடுத்தோர் என்று அழைக்கலாமா? உருளையும் வெங்காயமும் போல், குளிர் பானமும் தித்திப்பும் போல, பொங்கலும் அவியலும் போல—அங்கு உபசரிப்பும் ஊழியமும் இரண்டறக் கலந்து கிடந்தன.

காப்பியைக் கொண்டு வரும் போது மேசையில் சிந்தி, உட்கார்ந்திருப்பவர்

உடையை நாசமாக்கி, வண்ணான் குலத்தை வாழ வைக்கும் அமனி, அப்ஸரஸில் இல்லே. அப்படிச் செய்தாவது கோலக் குரலெடுத்து 'ஸாரி மன்னிக்க வேண்டும்' என்று இரண்டொரு தேமொழி பேசமாட்டார்களா என்று கூடச் சில ஆதரவாளர்கள் எண்ணியதுண்டு.

அப்ஸரஸ் உண்மையில் உபசாரத்தின் கந்தர்வ லோகம். பத்திரிகையாளரும் எழுத்தாளர்களும் வளம் மிகுந்த கற்பனையைத் தேடி அங்கு விஜயம் செய்தனர். சினிமா டைரக்டர்களும், வணிகர்களும் வந்து சிறப்பித்தனர்; ஓவியர்கள் சித்திரமாடலுக்காகச் சிற்றுண்டி அருந்தினர்; மாணவர் குழாமோ சொல்லத் தேவையில்லே.

அப்ஸரஸ் — கண்ணின் அஜந்தா; நாவின் நாலாந்தா !

இடையில் ஒரு வருடம் ஊரில் இல்லாமல், வடக்கே சுற்றிவிட்டுத் திரும்பி வந்ததும் அப்சரஸை நாடிப் போனேன். அதற்குப் பதில் 'அகஸ்தியர் சிற்றுண்டி சாலே' காணப்பட்டது. காப்பியில் கரைந்த சர்க்கரை போல் வானத்துப் பெண்கள் அந்தர்த்தியானம் ஆகிய விந்தை என்ன? திருவாளர் சுந்தரம்பிள்ளேயைத் தேடிக் கண்டு பிடித்தேன்.

''அதையேன் கேட்கிறீங்க ! அபாரமான ஆரம்பம்தான்! அற்புதமான ஐடியாதான்!''

''உங்க 'லேடி ஸர்வர்கள்' ஓடி வேலே செய்ய, ஓட்டல் நாளொரு ஸ்வீட்டும் பொழுதொரு காரமுமாக வளர்ந்ததே !''

''கடனும் வளர்ந்ததுங்க! அல்லிகளேப் போட்டதிலே அவுட்டாயிடுச்சி. நாரீமணி அஞ்சனம் தீட்டிப் பவுடர் போட்டுக்கிட்டு வர்றதுக்குள்ளே, தோசை தீஞ்சு போச்சு. பிஸினஸ் ஆரம்பிச்சு நாலு மாசத்துக்குள்ளே இரண்டு மணிகள் 'லவ்' பண்ணிக் கல்யாணமாகிப் போயிட்டாங்க. ஒருத்திக்கு 'மடர்னிட்டி' லீவு! கட்டி வருங்களா? மனேவியுடன் வருகிற கஸ்டமரு மறு தடவை இங்கே வர்றதில்லே !''

''அதென்ன கூத்து?''

''நாகரிக நாரீமணிகளேப் பார்த்த பிறகு சம்சாரத்துக்கு என்ன பயம் தோணிச்சோ ? கணவன்மார்களுக்குச் சுசிருசியா டிபன் கட்டித் தந்து இங்கு வரவொட்டாமல் பண்ணிவிட்டாங்க !''

''அட பாவமே ! யுவதி ஸர்வர் அவதியில் முடிந்ததா?''

''வேறு என்ன பிஸினஸ் பண்ணலாம், சொல்லுங்க!'' என்ருர் திருவாளர் புரட்சி.

கடனில் மூழ்கிய அவரைக் கரை சேர்க்க நான் பலத்த சிந்தனேயில் மூழ்கினேன்.

## சமதர்மம் □ □ □ □ □ □ □ □ □ □ □ □ □ □ □ □ □ □ □ □ □ □ □ □ □ □

கடைத் தெருவைக் கூட்டம் வந்து மொய்க்கும் நேரம். தன் கடையிலிருந்த பழங்கள் அனேத்தையும் ஒவ்வொன்ருக எடுத்துத் துடைத்து வைத்துக் கொண்டிருந்தான் கடைக்காரன்.

புது மெருகு ஏற்றப்பட்ட ஆரஞ்சுப் பழம் ஆற்ருமையுடன் பொருமிற்று:

''நம்மையெல்லாம் துடைத்து வைப்பதோடு சரி; அந்த ஆப்பிள் பழத்துக்கு மட்டும்...''

''என்னவாம்?'' என்று இடைமறித்துக் கேட்டது திராட்சை.

''வெள்ளேக் கலே உடுத்தி, வெள்ளேப் பணி பூண்டு, வெள்ளே அரியாசனத்தில் ஏற்றி...''

''ஓ! அதைச் சுற்றி வைத்திருக்கும் அந்த மெல்லிய வெள்ளேக் காகிதத்தைச் சொல்கிருயா? ஆமாம் ஆமாம், அதற்கு எப்போதுமே ஒரு தனி அலங்காரம்தான் !'' என்று அது சொன்னதைத் திராட்சை ஆமோதித்தது.

''ஏன் இருக்கக் கூடாதா ? அது உன்னேப் போல் கன்னங் கரேலென்ரு இருக்கிறது? எப்போதுமே அது தன் அழகிலும் தனி, மதிப்பிலும் தனி!'' என்றது அன்னுசி.

மாதுளே திரும்பி, ''யாரது, பைன் ஆப்பிள் ஸாரா? யூ ஆர் கரெக்ட்! முள்ளம் பன்றி போல் இருக்கும் உமக்குச் சாதாரண பன்றி போல் இருக்கும் ஆப்பிள் தன் அழகிலும் தனியாய்த்தான் தெரியும், மதிப்பிலும் தனியாய்த்தான் தெரியும்!'' என்றது எரிச்சலுடன்.

அப்போது அழுகிப்போன ஆரஞ்சுப் பழம் ஒன்ருேடு கன்றிப்போன ஆப்பிள் பழம் ஒன்றையும் எடுத்துக் கடைக்



காரன் குப்பைத் தொட்டியில் விட்டெறிய, ''வாழ்க சமதர்மம்!'' என்றது வாழைப்பழம்.

''நாசமாய்ப்போச்சு! வாழும்போது இல்லாத சமதர்மம் சாகும்போது எதற்காம்?'' என்றது ஆரஞ்சு.

''ஸ், பேசாதே! மனிதர்களுக்குச் சமதர்மம் சுடுகாட்டில் கிட்டுவதுபோல நமக்குக் குப்பைத் தொட்டியிலாவது கிட்டட்டும்!'' என்று சொல்லி அதன் வாயை அடக்கிற்று திராட்சை.

□ □ □ □ □ □ □ □ □ □ □ □ □ □ □ □ □ □ □ □ □ □ □ □ □ □ □ **விந்தன்**

வேலூரில் காணக் கிடைக்காத தாயன்பை லட்சுமி அம்மாளிடமும், பிறவியால் பெற முடியாத தங்கை அன்பைப் பாப்பாக் கண்ணிடமும், எந்தக் கல்லூரியிலும் பெற முடியாத உலகியல் அறிவை ஞானத் தந்தையான விசுவநாதனிடமும் நாணு பெற்றான் இங்கே. உள்ளத்து ஒட்டுறவே பிரதான மாக இருந்தது. தொழிற்சாலையிலே அவனுக்கு ஒரு நல்லவேலை போட்டுத் தருவதாக விசுவநாதன் கூறினார். அவன் அதை ஏற்கவில்லை. தன்னைத் தொழிற்சங்கத்துக்கென்றே அர்ப்பணித்து விட்டான்.

இப்போது நாணுவைப் பார்த்தால் அடையாளம் காண்பது அரிது. அவன் விசுவநாதன் வீட்டில் இருந்தாலும் தொழிற்சங்கச் சூழ்நிலையில் நான்கு ஆண்டுகள் ஓடி விட்



# யாத்திரை

## 12 ஏ.எஸ்.ராகவன்

டன. இலேசாக வளர்ந்திருந்த மீசை அவனை மனிதனாக்கியிருந்தது. கரகரப்பாக உடைந்து போயிருந்த குரல் அவனைப் புதியவனாக்கியிருந்தது. பணிக்கரிடமிருந்து அவன் கற்றுக் கொண்டவை புரட்சி வாதம், போராட்ட அறை கூவல்கள், நியாயமான வழிகள், ஜிப்பா அணிதல். இந்த ஜிப்பா அவனுடைய தோற்றத்தை மேலும் கவர்ச்சிகரமாக்கியிருந்தது. அவன் ஒரு முக்கிய தொழிற் சங்கவாதியாகி விட்டான். பம்பாய்க்கும் கல்கத்தாவுக்கும் மாநாடுகளுக்குக் கூடப் போய் வந்தான்.

''நீ தொழிற்சங்க வாதியானது சரிதான், நாராயண்.... தொழிற்சங்க வியாதியில் சிக்கி விடாதே'' என்றார் விசுவநாதன் ஒரு நாள்.

அவர் சொன்ன போது அவனுக்குச் சிரிப்பு வந்தது. ''ஏதாவது சொல்லாவிட்டால் உங்களுக்குப் பொழுது போகாது'' என்றான். ஆனால் அவர் சொன்னது எவ்வளவு உண்மை என்பதை விரைவிலேயே அவன் உணர நேர்ந்தது.

பணிக்கர் மேல்சபைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டு விட்டதால் அவரால் சங்க நிர்வாகத்தில் முன்போல் ஈடுபட முடியவில்லை. தவிரவும் கல்யாணம் ஆகிவிட்டது அவருக்கு. அவருடைய மனைவி சென்னையில் அலுவல் பார்த்தாள். அவரும் அங்கேயே போக நேர்ந்தது. பணிக்கருக்குப் பதிலாக நாயர்

ஒருவர் வந்தார் பொறுப்பேற்க. நாணுவுக்கு வேலைப் பளு அதிகம் ஆயிற்று.

''நாராயண்.....! நிலைமை வர வர மோசமாகிக் கொண்டே போகிறதே, கவனித்தீர்களா?'' என்றார் நாயர் ஒரு நாள்.

''என்ன?'' என்று கேட்டான் அவன்.

''ஒரு போராட்டம், வேலை நிறுத்தம், வழக்கு எதுவும் இல்லாமல் போய்விட்டது. சங்க உறுப்பினர்களின் தொகை குறைந்து கொண்டே போகிறது.... இருக்கிறவர்களும் சந்தாத் தொகையை ஒழுங்காகக் கட்ட மறுத்து வருகிறார்கள்'' என்றார் நாயர்.

'' உண்மைதான் '' என்றான் நாணு. அவனுக்குச் சிரிப்பு வந்தது. ''சங்கில் நோய்



இல்லாவிட்டால் டாக்டருக்குப் பிழைப்பு கஷ்டமாகி விடும்..... ஆனால் ஊர் ஜனங்கள் ஆரோக்கியமாக இருக்கிறார்கள் என்றல்லவா அர்த்தம் ?'' என்று கேட்டான்.

நாயர் அவன் பேச்சுக்கு மதிப்புக் கொடுக்காமல் தீவிரமாகச் சிந்தித்து ஒரு போராட்டத்துக்கு அடிகோலினார்.

''நாயர்! இது அவசியம்தானா?.... இந்தத் தொழிலாளி குப்புசாமியிடம் திறமையும் இல்லை; விசுவாசமும் இல்லை. முதலாளியையே கொலை செய்ய முயன்றவன்! இவனை வேலையிலிருந்து நீக்கியது முற்றிலும் சரியென்று மற்றத் தொழிலாளர்களே சொல்கிறார்களே!'' என்றான் நாணு.

நாயர் அவனை வியப்புடன் பார்த்தார். ''நாராயண்! நீங்கள் இப்படிப் பேசுவது சரியில்லை..... நமக்குப் போராட்டம் அவசியம். அதற்கு அவன் வழக்கு கிடைத்ததே என்று சந்தோஷப்படுங்கள்'' என்றார்.

''போராட்டத்தில் நியாயம் வேண்டாமா? பணிக்கர் இருந்தால் இதை ஏற்க மாட்டார், மிஸ்டர் நாயர்!'' என்றான் நாணு.

''பணிக்கருக்கு என்ன தெரியும்? அவன் காந்தியவாதி. சண்டை போட லாயக்கில்லாத கோழையாக்கும். ஆலப்புழையிலே அவன் நடத்தின சங்கத்தை நானல்லவா உயிர் ஊட்டிப் பிழைக்க வைத்தேன்!'' என்றார் நாயர்.

நாணு அந்தப் பேச்சை அத்துடன் நிறுத்திக் கொண்டான். நாயரோடு தனிப்பட்டமுறையில் விவாதம் செய்வதில் பயனில்லை. மறுநாள் தொழிற்சங்கக் கவுன்சில் கூடும்போது அதிலே அவர் கட்சியை உடைக்கலாம் என்று மனத்துக்குள் முடிவு செய்து கொண்டான். ஆனால் அவனுடைய மனசையே உடைப்பதென்று நாயர் முடிவு செய்து விட்டார்.

''தொழிற்சங்க ஊழியன் என்று சொல்கிற நாராயண் ஒரு முதலாளியின் வீட்டில் அவருக்குப் பிள்ளையாக வளர்கிற கருங்காலி. நம் திட்டங்களை உடனுக்குடன் முதலாளிகளிடம் தெரிவித்துக் கைக்கூலி வாங்குகிற துரோகி.....'' என்று தொழிலாளர்களை முடுக்கி விட்டார்.

அறிவின் பாஷையைவிட அறியாமையின் உளறல் பாமரரை ஈர்க்குமல்லவா?

நாணு தன்னைச் சுற்றிலும் பகைமையும் துவேஷமும் பரவி விட்டதைக் கண்டுகொள்ள நேரமாகவில்லை. பணிக்கரின் வார்த்தைகளை நினைவுகூர்ந்தான். ''நமக்கு விரோதிகள் முதலாளிகள் அல்ல, நாராயண்.... நம் கொள்கைகளைச் சுயநலத்துக்காக வளைக்கும் நம்மவர்களே நமக்கு முதல் விரோதிகள்.... பெருமை வாய்ந்த தொழிற்சங்க இயக்கத்துக்கு இந்தச் சுயநலக் கும்பலே புல்லுருவிகள். இவர்களை எதிர்த்துப் போராடத்தான் நமக்கு உறுதி வேண்டும்'' என்று அவர் சொல்வதுண்டு. நாணு அந்தச் சுயநலக் கும்பலை எதிர்க்கத் துணிந்தான்.

கவுன்சிலில் நாணு பேச எழுந்தபோது கூச்சல் எழுந்தது. ''பேசாதே! உட்கார்!'' 'கருங்காலி! திரும்பிப் போ!' என்ற கூக்குரல்கள் மிகுந்தன. அவற்றை இலட்சியம் செய்யாமல் நாணு பேசினான்.

''தோழர்களே, என்னைக் கருங்காலியாக்கி நீங்கள் கூச்சல் இடுவதைக் கண்டு நான் பயந்து என் மனத்தில் படுவதைச் சொல்லாமல் போகப் போவதில்லை.... இந்த இயக்கம் எனக்கு உயிர் மூச்சு. முதலாளியின் வீட்டில் வசிப்பதால் நான் உங்களுக்குத் துரோகம் செய்வதாக எண்ணுகிறீர்களே, இதே பேச்சு வேறு விதமாகவும் திரும்பலாமல்லவா? முதலாளியின் வீட்டில் இருந்துகொண்டே அவர்களின் மனசை அறிந்து உங்களுக்காகப் பாடுபடும் கருங்காலி என்று முதலாளி என்னை ஏசக் கூடுமல்லவா?

''தோழர்களே, நான் அனுபவம் இல்லாத சிறுவன்தான். என் குருநாதராகிய பணிக்கர் எனக்குச் சில நல்ல அறிவுரைகள் கூறிவிட்டுச் சென்றிருக்கிறார். அந்த அறிவுரையில் ஒன்றை மட்டும் உங்களுக்குச் சொல்ல விரும்புகிறேன். முதலாளி ஒரு ஸ்தாபனத்துக்குக் கணவன் போன்றவர். ஊழியர் மனைவியாகிறார்.... ஒரு ஸ்தாபனம் என்பது குடும்பத்துக்குச் சமானம்... இவர்களுக்குள் ஒற்றுமை இல்லாவிட்டால் குடும்பம் சீர்கெடும். ஊர் சிரிக்கும்.

''கணவன் மீது குற்றமே காண்கிற மனைவிக்கு வாழ்வில் சுகம் கிடைப்பதில்லை. மறுமையில்கூட அவளுக்கு நல்ல கதி இல்லை என்று நம் பெரியோர்கள் சொல்லியிருக்கின்றனர். அதை மறக்க வேண்டாம்.''

அடுத்துப் பேசினார் நாயர்:

''நண்பர் நாராயணன் இளைஞர். அனுபவம் போதாது அவருக்கு. அதை அவரே ஒப்புக் கொள்கிறார். முதலாளிக்குக் கருங்காலியாக இருப்பதாகச் சொல்லக் கூடும் என்பதையும் அவர் மறுக்கவில்லை. தொழிலாளர்களே! கருங்காலித்தனம் முதலாளிக்காகச் செய்தாலும் சரி, தொழிலாளிக்காகச் செய்தாலும் சரி, அது துரோகம். மன்னிக்க முடியாத குற்றம். அவர்களுக்குத் தொழிற்சங்கத்தில் இடம் இல்லை. முதலாளி என்பவர் புருஷர், நாமெல்லாம் மனைவியர் என்று பேசினார். உவமை சொன்னால் பொருத்தமாகச் சொல்ல வேண்டும். இல்லாவிட்டால் சொல்லாமலே இருக்கலாம். நமக்குக் கொள்கை பெரிது. அழகான பேச்சு அல்ல. பேச்சா சோறு போடும்? போராட்டம் தவறென்று எந்தத் தொழிற்சங்கவாதியும் சொல்ல மாட்டான். அப்படிச் சொல்பவன் தொழிற்சங்கவாதியல்ல; வியாதி.''

நாயரின் கை வென்றது. அவர் கோஷ்டி வென்றது. நாணு கருங்காலியாகவும், துரோகியாகவும் கருதப்பட்டான். இரவு பகல் என்று பாராமல் யார் நலத்துக்காக அவன் உழைத்தானோ அவர்களே அவனுக்கு இந்தப் பட்டங்களைச் சூட்டி விட்டார்கள். ஆனால் அவர்கள் நல்லவர்கள். தவறான பாதையில் செல்கிறோம் என்பதை உணர முடியாதவர்கள். தலைவன் காட்டும் வழியே தக்க வழி என்று கருதும் குழந்தைகள்.

**பணிக்கரின் தலைமை மாறிய பின் சங்கத்தின் போக்கும் மாறிப் போய்விட்டது.**

வீட்டை அடைந்த நாணு உணவு கொள்ளப் பிடிக்காமல் தன் அறைக்குள் புதைந்து கொண்டான். பாப்பாக் கண்ணு வந்து எட்டிப் பார்த்து, ''அண்ணு!'' என்று கூப்பிட்டு வராமல் போகவே வருத்தத்தோடு திரும்பினாள். லட்சுமி அம்மாள் வந்து தலை நீட்டி, ''குழந்தை!'' என்றாள். அதற்குப் பதில் வராது போகவே அவளும் திரும்பினாள்.

''குழந்தை என்னவோ போலிருக்கிறான்... சாப்பிடவும் வரவில்லை'' என்றாள் லட்சுமி அம்மாள் விசுவநாதனிடம் போய்.

''சேவையின் புகழ் அவனை அமுக்கிக் கொண்டிருக்கிறது லட்சுமி... அவன் கருங்காலியாம். அவனுக்கு எதிராகத் தீர்மானம் போட்டிருக்கிறார்கள்'' என்றார் அவர்.

''அட, ராமா!''

''நீ அவனை இங்கே அழைத்து வந்ததால் தான் இப்படி ஆயிற்று. அவனுக்கு உதவி செய்வதற்குப் பதிலாகத் தீமை செய்து விட்டாய், லட்சுமி!''

''ரொம்ப அழகுதான் போங்கள். நாம் என்ன அவன் வழியில் தலையிடுகிறோமா?''

''அது உனக்கும் எனக்கும் தெரியும். உலகத்துக்குத் தெரியுமா?''

''உலகம் சொல்வதற்கெல்லாம் பயப்பட முடியுமா?''

''பயப்படத்தான் வேண்டும்.''

'' 'உலகம் என்பது உயர்ந்தோர் மாட்டு' என்பது தவறு?''

''தவறில்லை லட்சுமி. நல்லவன் வாழ முடியாத காலமடி இது. நேர்மை வெல்வதற்கு வழியே இல்லாத கலியுகமடி இது... உனக்கு வெற்றியும் புகழும் வர வேண்டுமானால் இலட்சியத்தை மூட்டை கட்டி வைத்து விட்டுப் பிரத்தியட்ச உலகத்தைப் பார்த்து நடக்கப் பழகு, தெரிகிறதா?''

''அப்படி நடந்துதான் நீங்கள் வெற்றி பெற்றீர்களா?''

''என் வழி வேறே. நான் கஷ்டப்பட்டேன்... முன்னுக்கு வந்தேன். யாருக்கும் பதில் சொல்ல வேண்டிய அவசியம் எனக்கு இல்லை. நாணு அப்படியா? அவன் தொழிலாளர்களுக்குப் பதில் சொல்ல வேண்டிய தலைவனாகி விட்டானே?''

நாணு இந்த உரையாடலைக் கேட்டவாறே வந்தான்.

''இந்த வீடு உனக்கு இனிமேல் ஒத்துக் கொள்ளாது நாராயண்... உன் சேவைக்கு இது தடையாக இருக்கும். நீ விரும்பினால் வெளியேறலாம்'' என்றார் விசுவநாதன்.

லட்சுமி அம்மாள் பதறினாள். ''என்ன இது? நீங்களே அவனை விரட்டி அடிக்கிறீர்களே?'', என்று கேட்டாள்.

''அவனுடைய உலகம் வேறே, லட்சுமி. அவனைத் தடுப்பது சரியில்லை'' என்றார் விசுவநாதன்.

நாணு தலையை நிமிர்த்தி அவரைப் பார்த்தான். ''இல்லை, மாமா, நான் இங்கிருந்து போகப் போவதில்லை'' என்றான் உறுதியாக.

''என் வயிற்றில் பாலை வார்த்தாயடா, குழந்தை!'' என்றாள் லட்சுமி அம்மாள்.

''தொழிற்சங்கத்தை விட்டு விடப் போகிறாயா?'' என்று கேட்டார் விசுவநாதன்.

''அதையும் விடப் போவதில்லை.''

''உனக்கு என் வாழ்த்துக்களும், அனுதாபங்களும்..... உன் உறுதியை வாழ்த்துகிறேன். அதன் விளைவை நினைத்து அனுதாபப்படுகிறேன்.''

''அடியே, பேசிக் கொண்டே இருந்தால் பசி மறந்து விடும்.... பசிக்கப் புசி என்பது பழமொழி. போய் அவனுக்குச் சாதம் போடு!'' என்றார் விசுவநாதன்.

லட்சுமி அம்மாள் உணவு பரிமாறிய படியே கேட்டாள். ''குழந்தை, மாமா போகச் சொல்லி விட்டாரே என்று வருத்தமாடா? அவருக்கு எல்லாம் விளையாட்டுத்தான்.... நீ போய்விட மாட்டாயே.... போனால் நானும் போய் விடுவேன்'' என்றாள் துயரத்தோடு.

''நீங்கள் தூரத்திலிருந்தும் போவேனா, அம்மா? மாமா பேச்சை யார் லட்சியம் செய்வார்கள்?''

''அதல்ல. அவர் சொன்னதும் நியாயம் தான், குழந்தை!''

''அது நியாயமில்லை, அம்மா. நான் யாருக்கும் பயந்து ஓடமாட்டேன். ஒரு வேளை எனக்கே பயந்து ஓடலாம்.''

''உனக்குப் பயந்துதான் வேணாரிலிருந்து வந்தாயோ?''

''தயவுசெய்து அதைக் கேட்காதே, அம்மா!''

''கேட்கல்லே, குழந்தை. பத்மநாபனும் உயிராக இருந்தானே. அவனை விட்டு வந்து விட்டாயே, அந்த மாதிரி இங்கிருந்தும்...?''

''அந்த அன்பு வேறே ரகம்.''

''பத்மநாபன் நல்லவன்...அவனைப் போல் மனிதர்களைக் காண முடியாது. சுந்தரியிடம் அவனுக்கிருந்த வாத்ஸல்யம் இருக்கிறதே, அது....அடடே! மோர் ஊற்றுவதற்குள் கையலம்பி விட்டாயே!''

''போதும்.... பசி தீர்ந்து விட்டதம்மா.''

நாணு திரும்பவும் அறைக்குள் புகுந்து கொண்டான். லட்சுமி அம்மாள் வந்து ஒரு தம்ளர் நீரை நீட்டினாள். ''சாப்பிட்டதும் தண்ணீர் அருந்துவாய். இன்றைக்கு அதுகூட மறந்து போய் விட்டது உனக்கு... ஏன்?'' என்று கேட்டாள்.

''அம்மா, உனக்கு உள்ளூறப் பயம் வந்து விட்டது. அதனால் குழம்புகிறாய்.....



பள்ளிக்கூடத்தில் அட்டையில் எழுதப்பட்டுத் தொங்கும் ஒரு வாசகம் :

ஒரு மனிதனைத் திருத்தச் செய்வதைவிட ஒரு பையனை மனிதனாக உருவாக்கிவிடுவது சுலபம்.

பல்சுவைப் பக்கங்களில் இடம் பெற்ற புதிர்களுக்கு விடைகள் !



கதிரவனைக் கவி பாடிய
மாணவர்
**பாரதியார்தான் !**

## எண்ணித் துணிக கருமம்

1. மூன்றே மூவருக்குப் பங்கு வைத்துக் கொடுத்த பின், நான்காவது பழத்தை நான்காவது நபருக்குப் பெட்டியில் வைத்தவாறே கொடுங்கள்.

2. ஆங்கிலத்தில் 19—XIX—இதில் I-ஐ எடுங்கள்.

3. முடியுமே. $9 + \frac{99}{9} = 20.$

4. $44 + \frac{44}{4} = 55.$

5. தருமே. கடிகாரத்தில் 11 மணியுடன் 2 - ஐக் கூட்டினால் கிடைப்பது 13 - அதாவது 1 மணி.

6. உங்கள் வார்த்தையைத்தான்.

ஜீ. இராமச்சந்திரன்
சாக்கோவில்

எனக்குச் சங்கத்தைப் பற்றிய கவலை. வேறு ஒன்றுமில்லை. நீ நிம்மதியாகப் போ'' என்று கூறினான் நாணு.

அவனை அனுப்பி விட்டானே தவிர அத்தானைப் பற்றிய நினைவை, அது ஏற்படுத்தி விட்ட அருவருப்பை அவனால் வெளியே அனுப்ப முடியவில்லை. இங்கு வந்த பிறகு இத்தனை நாளைக்கு அவரை அவன் நினைத்ததே இல்லை. அது பழைய கதையாகி, மக்கிப் போயிருந்தது நெஞ்சில். இப்போது லட்சுமி அம்மாள் ஊற்றிய சிறு துளி நீர் அதற்கு உயிரூட்டி விட்டது !

பேச்சு வேணுவைத் தொட்டு விட்டது.

அவன் நெஞ்சையும் சுட்டு விட்டது. அப்பப்பா! அந்த நாட்களை அவனால் திரும்பிக் கூடப் பார்க்க இயலாது. ஒரு வகை அழுத்தம், புழுக்கம், ரகசியம் புதைந்த சிறைக்கூடமாக அத்தானின் வீடு இருந்ததே ! வதந்தியோ உண்மையோ, தன் காதில் எதுவும் விழ வேண்டாமென்றல்லவா ஓடி வந்தான் ! இன்னும் சில காலம் இருந்திருப்பான் அங்கேயே. அதற்குள் அப்பா வருவதாக இருந்து அவரை அத்தான் தடுத்ததும், அதற்கு விசித்திரமான காரணத்தை அவர் கற்பித்ததும், அவரையே தந்தையாக அவன் கொள்ள வேண்டுமென்று சொன்னதும் சேர்ந்து அவனை அங்கிருந்து விரட்டியடித்து விட்டன.

பத்மநாபனின் அன்பு களங்கமற்றதாக இருக்கலாம். ஆனால் அந்த அன்பு அசாதாரணமாக இருந்ததென்பதை இப்போது நாணு உணர்கிறான்.

நாணு தூங்குவதற்கு நெடுநேரமாயிற்று.

காலையில் வழக்கம் போல் சங்க அலுவல்களைக் கவனிக்க அவன் புறப்பட்டான். அவர்கள் விலக்கினாலும் அவனால் பொறுப்பிலிருந்து விலக முடியாது.

நாணு நெடுஞ்சாலையிலிருந்து குறுக்குச் சந்தின் வழியாக நடந்தபோது திடீரென்று, "துரோகி, நில்!" என்ற குரல் கேட்டது.

நாணு நின்றான். இப்படி ஏதாவது நடக்குமென்பதை அவன் எதிர்பார்த்திருந்தான்.

குப்புசாமியும் இன்னும் நாலைந்து பேர்களும் அவனை வளைத்துக் கொண்டார்கள். ''கருங்காலியை விடாதே.... துரோகியைக் கொலை செய்'' என்று குப்புசாமி கத்தினான்.

''நானா துரோகி?'' என்றான் நாணு.

குப்புசாமி பதில் சொல்லவில்லை. அவன் கையிலிருந்த தடி பதில் சொல்லிற்று. அது நாணுவின் முகத்தைத் தாக்கிற்று. ரத்தம் சீறிப் பாய்ந்தது வெளியே. நாணு மயங்கிச் சாய்ந்தான். அதன் பிறகு நடந்ததொன்றும் அவனுக்குத் தெரியாது. கண் விழித்துப் பார்த்த போது ஒரு புது இடத்தில் படுத்திருப்பது தெரிந்தது அவனுக்கு.

அறையின் சுத்தமும், அருகில் முக்காலியின் மேல் இருந்த மருந்துப் புட்டிகளும், தலைமாட்டில் தொங்கிய வெப்ப அளவுக் குறிப்பேடும் அந்த இடம் ஒரு மருத்துவமனை என்பதை உணர்த்தின. எழுந்திருக்க முயன்றான். தலையை அசைக்க முடியவில்லை. அப்போதுதான் அடிபட்ட விவரம் நினைவுக்கு வந்தது. குப்புசாமியின் வெறிக்குப் பலியானது தெரிந்தது.

''நாணு!''

யாரோ அழைக்கும் இனிய குரல் கேட்டது. குரல் வந்த திசையில் விழியைத் திருப்பினான். தலையைத்தான் அவனால் திருப்ப முடியவில்லையே !

அந்தக் குரலின் எதிரே வந்தது. குரலின் குளிர்மையும் அழகின் மயிலாக இருந்த அந்தப் பெண்ணை விழி இமைக்காது பார்த்தான் நாணு. பார்த்தவன் வியப்பு மீதூற, ''கமலா...நீயா?'' என்றான். (தொடரும்)

# வெற்றித் திருநகர்



அகிலன்

## அத்தியாயம் பதின்மூன்று

## நெஞ்சுக்கு நீதியும் தோளுக்கு வாளும்

கிருஷ்ணதேவராயர் கலிங்கத்துப் போரில் தாம் பெற்ற வெற்றியின் சின்னமாக அரண்மனைக்குள் பெரியதொரு வெற்றி விழா மண்டபம் எழுப்பி யிருந்தார். உயர்ந்தோங்கிய பீடம் போன்று அது அரண்மனைச் சுற்று மதில்களுக்குள்ளே தலை நிமிர்ந்து நின்றது. அதன் நான்கு புறங்களிலும் அற்புதம் அற்புதமான சிற்பங்கள் செதுக்கப் பெற்றிருந்தன. போருக்குச் செல்லும் வீரர் கூட்டம், நடனமாடும் மங்கையர் கூட்டம், போர்க்களக் காட்சிகள், வீரர்களின் விளையாட்டுக்கள், யானைகள், குதிரைகள் இவ்வாறெல்லாம் அன்றைய வாழ்க்கையின் அரிய நிகழ்ச்சிகளை அங்கே உயிர்ச் சிற்பங்களாகச் செதுக்கச் செய்திருந்தார் சக்கரவர்த்தி.

பீடத்தின் உச்சிக்குச் செல்வதற்காக அதன் முகப்பில் படிகள் பல கட்டப்பட்டிருந்தன. விசாலமான திறந்தவெளி அதற்கு முன்னே பரந்து கிடந்தது. இரு புறங்களிலும் அரண்மனை மாளிகைகளின் தாழ்வாரங்கள்.

வெற்றி விழாக்களை நடத்துவதற்கென்றே எழுப்பப் பெற்ற சதுரமான கல் மண்டபம் அது. ஆனால் அதுவரையில் சக்கரவர்த்தியைத் தவிர யாருக்குமே அங்கு விழா நடைபெற்றதில்லை. நவராத்திரியின் போது நடைபெற்ற மகா நவமித் திருவிழாவின் ஒன்பது நாட்களிலும் சக்கரவர்த்தி அங்கே கொலு வீற்றிருப்பது வழக்கம்.

அந்த வெற்றி விழா மண்டபத்தில் முதல் முதலாகச் சக்கரவர்த்தியல்லாத வேறொருவனுக்கு விழா நடைபெறுவது பற்றி அனைவருமே வியப்படைந்தார்கள். விசுவநாதனுக்கே அவனுடைய கண்களை நம்ப முடியவில்லை. மண்டபம் பட்டுத் திரைச்சீலைகளாலும், மலர்களாலும், அலங்கரிக்கப்பெற்று விழாக் கோலம் பூண்டிருந்தது. எதிரே திறந்த வெளியில் வரிசை வரிசையாக மற்போர் புரிய வந்த வீரர் கூட்டமும் நடனமாட வந்த கணிகையர் கூட்டமும் திரளாக இருந்தன. அலங்கரிக்கப் பெற்ற அரண்மனைக் குதிரைகளும் யானைகளும் பின்னே நின்று கொண்டிருந்தன. தாழ்வாரத்தின் ஒருபுறத்தில் அமரநாயக்கர்கள், படைத் தலைவர்கள், பெரிய அதிகாரிகள் முதலியோரும் மறுபுறத்தில் அவர்களுடைய மாளிகைப் பெண்டிரும் திரளாக இருந்தார்கள். மண்டபத்தின் மேல் சக்கரவர்த்தி கிருஷ்ணதேவராயர் வெண் பட்டாலான உடை தரித்து, அரியாசனத்தில் அமர்ந்து, விசுவநாதனின் வருகைக்காகக் காத்திருந்தார். அவருடைய ஆசனத்துக்கு அடுத்தாற்போல் மற்றோர் ஆசனம் போடப்பட்டிருந்தது.

அந்த ஆசனத்தைக் கண்டு வியப்படையாத கண்களே கூட்டத்தில் இல்லை. வழக்கமாகச் சக்கரவர்த்தி யாருக்குமே அப்படி ஒரு பெருமையை அளித்ததில்லை. யாருமே அவர் எதிரில் தொலைவில் நின்று கொண்டுதான் பேச வேண்டும். முக்கியமான சில வேளைகளின் போது மட்டிலும் குறிப்பிட்ட ஓரிருவரைத் தம் அருகே அமர்ந்திருக்கச் செய்வார். விழாக் காலங்களில் அந்தப் பீடத்தின்



மீது சக்கரவர்த்தியோடு திருமலா தேவியின் தந்தையார் உடன் இருப்பார். அப்பாஜி காலத்தில் அவரும், பிறகு சாளுவ நரசிம்மரும் இருப்பார்கள். அவர்களும் சற்று விலகித்தான் வீற்றிருப்பார்கள். ஆனால் இப்போதோ சக்கரவர்த்தியின் ஆசனத்தை ஒட்டினாற்போல் அவனுக்கும் போடப்பட்டிருந்தது.

அரண்மனையின் உள்வாயிலே விசுவநாதனின் ஊர்வலம் நெருங்கியவுடனேயே, குடிமக்களின் கூட்டம் அங்கு நின்று விட்டது. குதிரையிலிருந்து கீழே குதித்து மண்டபத்தை நோக்கி ஓடோடியும் வந்தான் விசுவநாதன். ஓடி வரும்போதே பெண்டிர் திரளாக நின்ற தாழ்வாரத்தில் லட்சுமியைக் கண்களால் தேடினான். அவளை அங்கு காணவில்லை. பின்னர் பட்டுத் துணிகள் விரிக்கப்பட்டிருந்த படிகளில் தாவி ஓடி, கிருஷ்ண தேவராயரின் பாதங்களில் விழப் போனான். அப்படியே அவனைக் கட்டி அணைத்துக் கொண்டு தம் அருகே ஆசனத்தில் அமர்த்தி வைத்தார் சக்கரவர்த்தி. மெய்சிலிர்த்தது விசுவநாதனுக்கு.

இன்னிசைக் கருவிகள் முழக்கம் செய்தன. எதிரே கூடியிருந்த இளைஞர்கள்மற்போர் விளையாட்டுக்களைத் தொடங்கினார்கள். அடுத்தாற்போல் தோகை விரித்தாடும் மயில்களென நடன மாதர்கள் ஆடினார்கள். ஆடிக் கொண்டே படியேறி வந்து விசுவநாதனுக்கு ஆரத்தி எடுத்துச் சென்றார்கள். விசுவநாதன் நேருக்கு மாறான இருவகை உணர்ச்சிகளின் கொந்தளிப்பில் அகப்பட்டுத் தவித்துக் கொண்டிருந்தான். சக்கரவர்த்தியின் பரிவால் ஒருபுறம் பூரிப்பும், மறுபுறம் பெற்றோரின் நினைவாலும், லட்சுமியின் நினைவாலும் துயரமும் அவனுள்ளே அலைமோதிக் கொண்டிருந்தன.

தோணி கரையருகே நெருங்கியவுடன் அதை ஒட்டி வந்த லட்சுமியைத் தன் விழிகளால் விழுங்கியபடியே அதற்குள் ஏறிக் கொண்டான் விசுவநாதன். தோணி தொடர்ந்து கரையோரமாகத் [illegible] மிதந்து சென்றது. இருவரும் வாய் திறந்து பேசும் நிலையில் இல்லை.

அட்டைப்படம்: வினு

அவனுடைய தந்தை நாகம நாயக்கரை அச்சுத ராயர் வந்து ரதத்தில் அழைத்துக் கொண்டு தனியே சென்றுவிட்டார். திரைச் சீலைகளால் மூடப்பட்டிருந்த ரதத்தில் நாகம நாயக்கர் எங்கு அழைத்துச் செல்லப்பட்டார் என்பது அவனுக்கே தெரியாது. சிறைச்சாலைக்குத்தான் அவர் சென்றிருப்பார். ஒரே சமயத்தில் தந்தைக்குத் தண்டனையும் மைந்தனுக்கு விழாவும் நடத்தப்படுகின்றனவா?

கிருஷ்ணதேவராயர் தமது ஆசனத்திலிருந்து எழுந்தார். பீடத்தின் மீதிருந்த அனைவரும் உடன்எழுந்து நின்றனர். கிருஷ்ண தேவராயர் பேசலானார்:

''இந்தச் சிறு போரில் பெற்ற வெற்றிக்காக இப்படி ஒரு விழாவா என்று நீங்கள் வியப்படைந்திருக்கிறீர்கள். மிகவும் இளைஞனான விசுவநாதனுக்கு இதுவரையில் விஜயநகரத்தின் வரலாறு காணாத வரவேற்பா என்று நீங்கள் திகைக்கிறீர்கள். ஏன் இந்த விழா என்பதை உங்களிடம் இப்போது கூற விரும்புகிறேன்.''

கூட்டம் மூச்சு விடவும் மறந்து அவர் சொற்களைக் கேட்டது. மனம், விழிகள், செவிகள் முதலிய ஐம்புலன்களும் அவரிடம் அப்போது திரும்பி யிருந்தன.

''இந்தப் பரத கண்டத்திலேயே நம்முடைய சாம்ராஜ்யம் இப்போது இதன் வலிமையிலும், பெருமையிலும் செல்வச் செழிப்பிலும் இமயம் போல் உயர்ந்தோங்கி நிற்கிறது. நம் சாம்ராஜ்யத்திலும் இந்தத் தலைமுறையினர் போல் இதற்கு முன்பு யாரும் இவ்வளவு அமைதியோடும் இன்பத்தோடும் வாழ்ந்ததில்லை. காரணம் என்ன? நம்முடைய படைவீரர் கூட்டத்தின் வலிமையாலும், நம்மிடமுள்ள பெருஞ் செல்வத்தாலும்தான் நாம் இப்படி வாழ முடிகிறதா? இல்லை! நமக்கென்று ஒரு லட்சியம் இருக்கிறது; ஒரு கொள்கை இருக்கிறது; ஓர் எண்ணம் இருக்கிறது. அதையே நாம் தர்மம் என்கிறோம்; அறம் என்று அழைக்கிறோம். அந்த எண்ணம் இந்த நாட்டின் ஆணிவேர் போன்றது; அதை நாம் நெஞ்சிலும், சிந்தையிலும் வைத்திருக்கும் வரையில், அந்த எண்ணத்தின் வழியே நாம் செயலாற்றும் வரை நம் சாம்ராஜ்யம் நிலைத்திருக்கும்!

''நம்முடைய அற வாழ்வு அழிக்கப்பட்டு, நம் நாடு சுடுகாடாவதைத் தடுப்பதற்காகவே இந்த விஜயநகரம் தோன்றியது என்பதைமட்டிலும்யாரும் மறந்து விடக் கூடாது. நமக்கு வந்த ஆபத்து இன்னும் நீங்கவில்லை. நம் நெஞ்சுக்கு நீதியும் தோளுக்கு வாளும் உள்ளவரையில்தான் பகைவர்கள் நம்மைக் கண்டு பதுங்கி யிருப்பார்கள். நீதியை என்று நாம் அலட்சியப்படுத்துகிறோமோ, வாளை என்று நாம் சுழற்றி எறிந்து விடுகிறோமோ, அன்று இந்த விஜயநகரம் இருக்காது.''

''சக்கரவர்த்திகளே!'' என்று பதறி, 'அவச் சொல் கூறுகிறீர்கள்' என்பதுபோல் விழித்துப் பார்த்தான் விசுவநாதன்.

''நம்மிடம் நீதிகோரி வந்த பாண்டியருக்கு நாமே அநீதி செய்தால் பிறகு யார்தாம் நம்மை நம்புவார்கள்? பல்வேறு பிரிவைச் சார்ந்த நாம் ஒன்றுபட்டு வாழாமல், தன்னலப் பேராசைக்கு இரையாகி விட்டால் இனி இந்தச் சாம்ராஜ்யம் நிலைக்குமா? சாம்ராஜ்யமே நிலைக்காதபோது தன்னலப் பேராசைக்காரர்கள் மட்டிலும் எப்படி இங்கே வாழ முடியும்? என்னுடைய வாழ்வு இனி நெடுநாட்கள் நிலைக்காது. ஆனால் இந்தச் சாம்ராஜ்யம் எனக்குப் பின்னாலும் நிலைக்க வேண்டும். இதை உணர்ந்து கொண்ட இளைஞர்களால்தான் இனித் தங்கள் வீட்டையும் நாட்டையும் காக்க முடியும்.

''தந்தை சொல் மிக்க மந்திரமில்லை என்று தமிழில் ஒரு மந்திரச் சொல் இருக்



சென்னை, J. வால்டர் தாம்ஸன் கம்பெனி ஸ்தாபனத்தைச் சார்ந்த ஸ்ரீ வி. ராமசேது, தனது தகப்பனார் ஸ்ரீ ஜி.பி. வைத்யநாத அய்யர் அவர்களின் சஷ்டி அப்த பூர்த்தி விழாவை சமீபத்தில் தஞ்சை ஜில்லா, பூவனூர் கிராமத்தில் மிக சிறப்பாகக் கொண்டாடினார்.





றேன். அன்பாக வளர்த்தவன் விசுவநாதன். அவன் தந்தையிடம் எவ்வளவு அன்பு வைத்திருக்கிறான் என்பதை நான் அறிவேன். ஆனால் தர்மமா, தந்தையா? ஒன்றுபட்ட சாம்ராஜ்யப் பெருவாழ்வா? அல்லது உட்பூசல் நிறைந்த பழைய ஐம்பத்தாறு தேசங்களா? விசுவநாதன் விடை கூறி விட்டான்! விசுவநாதனுக்கு விழா நிகழ்த்துவதன் வாயிலாக இந்த நாட்டு இளைஞர் கூட்டத்துக்கே இதை நான் நடத்துகிறேன். சாம்ராஜ்யம் உங்களுடையது. எதிர்காலமும் உங்களுடையது; லட்சியத்தோடு வாழுங்கள்!''

சித்தமாக அருகே வைக்கப் பெற்றிருந்த உடைவாளைக் கையிலெடுத்தார் சக்கரவர்த்தி. அதை எடுத்துத் தம் வலது கரத்தால் உயர்த்திப் பிடித்தார்.

''நெஞ்சில் நீதி நிறைந்த விசுவநாதனை அலங்கரிக்க இந்த வாளை நான் தருகிறேன். நெஞ்சில் நீதி இல்லாதவர்களை மனிதப் பிறவிகள் என்றே கூற முடியாது. மனிதத் தோல் போர்த்த அந்த மிருகங்களிடமிருந்து நம் குடிமக்களைக் காப்பதற்கே இந்த வாள் பயன்பட வேண்டும். நெஞ்சுக்கு நீதியும் தோளுக்கு வாளுமாக இருந்து நம் சாம்ராஜ்யத்தை இளைஞர்கள் காப்பாற்றுவார்களாக!''

விண்ணதிர வாழ்த்தொலிகள் எழுந்தன. விசுவநாதன் பணிவோடு உடைவாளைப் பெற்றுக் கொண்டான்.

''விசுவநாதா! நீ விரும்புவது ஏதேனும் இருந்தால் கேள். அதையும் நான் உனக்குப் பரிசாகத் தருகிறேன்'' என்றார் சக்கரவர்த்தி.

விசுவநாதன் தயங்கினான். கூட்டமும் அவன் எதைக் கேட்கப் போகிறானோ என்று துடிப்போடு எதிர்பார்த்தது. விசுவநாதனின் உதடுகள் துடித்தன. எதையோ நாத் தழுதழுக்க அவன் சக்கரவர்த்தியிடம் வேண்டிக் கொண்டான். எதை வேண்டினானென்று மற்றவர்களுக்கு விளங்கவில்லை.

''ஆகட்டும்; அப்படியே செய்கிறேன்!'' என்றார் கிருஷ்ணதேவராயர்.

## அத்தியாயம் பதினைந்து

# கலங்கினர் இருவர்

விழா முடிந்த பின்னர் சக்கரவர்த்தியிடம் சிறிது நேரம் தனித்திருந்து பாண்டிய நாட்டின் விவரங்களைக் கூறினான் விசுவநாதன். பிறகு உடன் வந்திருந்த சந்திர சேகர பாண்டியரை அழைத்து வந்து கிருஷ்ண தேவராயரிடம் விட்டு விட்டு விடை பெற்றுக் கொண்டான். மாளிகையில் அவன் வரவுக்காகக் காத்திருந்த அன்னை கமலா தேவியாரின் நினைவு அவனை வெகு நேரமாக வாட்டிக் கொண்டிருந்தது. வழியில் அமைச்சர் சாளுவ நரசிம்மரின் மாளிகையைக் கடந்து சென்றபோது அவனையும் மீறி அவன் விழிகள் அப்பக்கம் திரும்பின. வாயில் புறத்திலோ, மேல் மாடத்திலோ லட்சுமி தென்படவில்லை. விரைந்து சென்று தன் மாளிகைக்குள் நுழைந்தான்.

கமலா தேவியின் உடல் நலம் முன்னைவிட அதிகமாகப் பாதிக்கப்பட்டிருந்தது. அவனுக்காக நடைபெற்ற ஊர்வலத்தையும் விழாக்களையும் அவர் கேள்வியுற்றிருந்தாலும் அவர் மனம் அவைகளினால் சிறிதுகூட அமைதியுறவில்லை.

''உன் அப்பா இப்போது எங்கே இருக்கிறார்கள்? எப்படி இருக்கிறார்கள்?'' என்று கேட்டார்.

''நகரத்தின் எல்லையிலிருந்து அவர்களைச் சக்கரவர்த்தியின் ஆணையின் பேரில் அச்சுதராயர் அழைத்துச் சென்றிருக்கிறார். அப்பா இப்போது இங்குதான் இருக்கிறார்கள்.''

''எங்கே, சிறைச்சாலையிலா?''

விசுவநாதன் பதில் அளிக்கவில்லை. ஏதோ ஒரு செய்தியை அவன் தன் அன்னையாரிடம் தெரிவிக்க விரும்பினான். என்றாலும் முழு விவரமும் தெரிவதற்குள் அதை வெளியிடுவதற்கு மனமில்லை. ''அவர்களுக்கு ஆபத்து ஒன்றும் நேர்ந்து விடாது! நீங்கள் கவலையுறுகிறீர்கள்'' என்று தேற்றினான். வெகு நேரம் அருகில் இருந்து நடந்த விவரங்களை யெல்லாம் கூறினான்.

பின்னர் தன் கூடத்துக்கு வந்து இருக்கையில் சாய்ந்தான் விசுவநாதன். மகிழ்ச்சியின் சிகரத்தில் இளைத்திருக்க வேண்டிய அவன் மனம் அதற்கு முற்றிலும் மாறாக மிகவும் சோர்ந்து போயிருந்தது. தன் தந்தையாரைப் பற்றிக் கூட அவன் அவ்வளவாகக் கவலைப்படவில்லை. லட்சுமியின் முகத்தை இன்னும் பார்க்க முடியவில்லையே என்ற ஏக்கமே அவனை வாட்டி எடுத்தது.

''இளவரசே!'' என்ற குரல் கேட்டுத் திடுக்கிட்டுத் திரும்பியவன், அங்கே லட்சுமியின் பணிப் பெண் நிற்பதைக் கண்டான். சிறியதொரு நறுக்கோலையை அவனிடம் நீட்டிவிட்டு, அவனுடைய மறுமொழிக்காகக் காத்திருந்தாள் அவள். படித்துப் பார்த்து விட்டு, ''நான் இப்போதே அங்கு கிளம்புகிறேன்!'' எனக் குதித்து எழுந்தான்.

மாலை நேரம் நன்றாக மயங்கிவிட்ட வேளையில் அவன் துங்கபத்திராவின் தொலை தூரத்துக் கரையில் லட்சுமிக்காகத் தனியே காத்திருந்தான். சிறியதொரு தோணி ஆற்றின் வெள்ளப் போக்கில் மிதந்து வந்து கொண்டிருந்தது. தோணி கரையருகே நெருங்கியவுடன் அதை ஓட்டி வந்த லட்சுமியைத் தன் விழிகளால் விழுங்கியபடியே அதற்குள் ஏறிக்கொண்டான் விசுவநாதன். தோணி தொடர்ந்து கரை ஓரமாகத் தானாகவே மிதந்து சென்றது. இருவருமே வாய் திறந்து பேசும் நிலையில் இல்லை.

இதயம் பொங்கி லட்சுமியின் கண்களின் வழியே ஊற்றுப் பெருக்கெடுத்தது.



"ஆறுமுகத்துக்குக் கிடைக்க வேண்டிய சான்ஸ் ஏழுமலைக்குக் கிடைத்து விட்டது!"
"எப்படி ?"
"ஒரு மார்க் வித்தியாசமாம் !"

விசுவநாதன் சிறிது நேரம் தடுமாறிவிட்டு, "நீ எனக்கு வெற்றித் திலகமிட்டு அன்றைக்கு அனுப்பி வைத்தாய்; வெற்றியோடு திரும்பி விட்டேன்" என்றான்.

"அனுப்பி வைக்கத்தான் முடிந்ததே தவிர வரவேற்க முடியவில்லையே! ஊர்வலத்தை மேல் மாடத்திலிருந்து பார்க்க முயன்று ஏமாற்றமடைந்தேன். அரண்மனைக்கும் நேரில் வரமுடியவில்லை. என் தோழிகள் சொல்லக் கேட்டுத் தெரிந்து கொண்டேன்."

"ஊர்வலமும், விழாவும் போனால் என்ன? உன்னருகிலேயே வந்து விட்டேனே போதாதா ?"

லட்சுமி அவனைத் துயரத்தோடு திரும்பிப் பார்த்தாள். பிறகு எதையோ நினைத்துக் கொண்டவள் போல், "சக்கரவர்த்திகள் நீங்கள் விரும்புவதைத் தருவதாக வாக்களித்தார்களாமே, நீங்கள் அவர்களிடம் என்ன கேட்டீர்கள்?" என்றாள்.

விசுவநாதன் தயங்கினான். "ஏன், நான் எதைக் கேட்டிருக்க வேண்டும்?" என்று அவளையே திருப்பிக் கேட்டான்.

"என்னை நீங்கள் கேட்டிருக்க வேண்டும். உடனடியாக நம் திருமணம் நடக்க வேண்டும் என்று கேட்டிருக்க வேண்டும். என் அப்பாவுக்கு அவர்களைக் கட்டளையிடச் சொல்லியிருக்க வேண்டும். நீங்கள் இப்படிக் கேட்டிருந்தால் நான் மகிழ்ச்சியடைந்திருப்பேன்" என்றாள்.

அவளுடைய போக்கில் என்றுமில்லாத பரபரப்பும், கலவரமும் காணப்பட்டன. அதைக் கண்டு அவன் திடுக்கிட்டான். லட்சுமி அளவுக்கு மீறி அன்று உணர்ச்சி வயப்பட்டிருந்தாள். அவளுடைய குரலில் ஒலித்த ஆத்திரத்தின் காரணத்தை அவனால் ஓரளவே உணர்ந்து கொள்ள முடிந்தது.

"மாமாவிடம் நான் உன்னைப் பற்றிக் கேட்டேன்; அவர்கள் எனக்குச் சரியான மறுமொழி கூறவில்லை."

"அவர்கள்தாம் என்னைத் தடுத்துவிட்டார்கள்" என்று குழந்தை போல் அழுது கொண்டே கூறினாள் லட்சுமி. "சக்கரவர்த்திகளின் கட்டளை பிறந்தாலே இனி நாம் நினைப்பது நடைபெறும்; இல்லாவிட்டால் அப்பா என்ன செய்வார்கள் என்று கூற முடியாது."

"என்ன செய்வாரகளென்று தோன்றுகிறது?"

"நாங்கள் விஜயநகரத்தை விட்டே புறப்பட்டு விடக் கூடும். தஞ்சைக்குப் புறப்படவேண்டும் என்று கூறுகிறார்கள் அப்பா!"

விசுவநாதனும் கலங்கினான்.

"என்ன, சக்கரவர்த்திகளிடம் முறையிடப் போகிறீர்களா இல்லையா?"

"லட்சுமி! இப்போது என் தந்தை சிறையில் இருக்கிறார்கள். இந்த நிலையில் நான் திருமணத்தைப் பற்றிச் சக்கரவர்த்திகளிடம் கேட்பது ஏற்றதாக இருக்குமா என்று நீயே யோசித்துப் பார். மேலும் சக்கரவர்த்திகளின் ஆணையின் பேரில் உன் அப்பாவை உடன்படச் செய்வதை விட, அவர்களிடமே முறைப்படி கேட்டு உன்னைப் பெற முடியும் என்று நான் நம்புகிறேன்."

"நான் அப்படி நம்பவில்லை. என்னுடைய நம்பிக்கையையே அப்பா குலைத்து விட்டார்."

தோணி மெல்லப் போய்க் கொண்டிருந்தது. விசுவநாதன் துடுப்பு வலித்துக் கொண்டே அவளிடம் பேசினான். லட்சுமி அவனுடைய கண்களுக்கு என்றையும் விடப் பேரழகோடு தோன்றினாள். இந்த அளவுக்கு இதற்கு முன்பாக அவள் நெஞ்சு அவனுக்கு முன்னால் பாகாக உருகியதில்லை.

"அப்பாவும் அம்மாவுமே விரைவில் உங்கள் மாளிகைக்கு வந்து திருமணம் பற்றிப் பேசும் நாள் வரக் கூடும். அப்பாவின் விருப்பத்தை மாமா எப்போதுமே தட்டிப் பேசியதில்லை. என்மீது அவருக்கு எவ்வளவுதான் கோபமிருந்தாலும், அப்பாவுக்காகவாவது அவர் மறுத்துக் கூற மாட்டார்."

"இப்படி நடக்குமென்று நீங்கள் உண்மையாகவே நினைக்கிறீர்களா?" என்று கேட்டாள் லட்சுமி. அவன் துடுப்பு வலிப்பதையும் மறந்து விட்டுச் சட்டென்று அவன் கரத்தைப் பற்றினாள். துடுப்பு நழுவியது; தோணியும் ஒரு கணம் தடுமாறியது.

"ஏன், நீ நினைக்கவில்லையா?" என்றான் விசுவநாதன்.

லட்சுமிக்கு அவள் தந்தை கூறியதுதான் அப்போது நினைவுக்கு வந்தது. நாகம நாயக்கருக்கும் அப்பாஜிக்குக் கிடைத்த அதே தண்டனை கிடைக்கும். அல்லது ஆணையை மீறிய குற்றத்துக்காக அவர் சிரச் சேதம் செய்யப் படுவார். இந்த இரண்டில் எந்தத் தண்டனை அவருக்குக் கிடைத்தாலும் அது கிடைப்பதற்குக் காரணமாக இருந்த விசுவநாதனோடு அவள் அப்பா உறவு கொள்ள மாட்டார்.

லட்சுமிக்கு அவள் நினைத்ததை வாய்விட்டுக் கூற முடியவில்லை. அவள் தேம்பித் தேம்பி அழுதாள். விசுவநாதனின் கண்களும் அவளுக்காகக் கலங்கின. (தொடரும்)

# ரங்கனும் நானும்

ஜடாதரன்



**மீசை வைத்துக்** கொண்டபிறகு இந்த 'சுயக்ஷவர' வேலையே பெரும் தொல்லையாகப் போய்விட்டது. மீசையின் ஆசையைத் தியாகம் செய்யவும் மனமில்லை. 'நாற்பது வயதில் என்ன ஐயா, இந்தக் 'கண்ணராவி வேண்டிக் கிடக்கிறது' என்று என்னுடைய புதுத் தோற்றத்தை வயதுடன் இணைத்துக் கண்டனம் செய்த 'மைனாரிடி'களும் இருந்தனர். ஆனால் ரங்கனின் மனத்தில் உதித்த ஓர் 'ஐடியா'வை உதாசீனம் செய்ய நான் தயாராக இல்லை.

ஆறு மாதங்களுக்கு முன்பு ஒரு நாள் அவனுடைய பிடிப்பில் நான் கட்டுண்டு கிடந்த போது, மீசைப் பகுதியை மாத்திரம் ஞாபகப் பிசகாய் 'ஸோப்' போடாமல் வழித்துக் கொண்டு வந்தவன் திடீரென்று ஒரு பேருண்மையைக் கண்டுபிடித்து விட்டவன் போல எனக்கு விளக்கினான்.

''ஸார்! இப்படியே விட்டுப் பாருங்களேன். உங்களுடைய முகத்துக்கு அலாதி களை கட்டுதே மீசை!''

நானும் பார்த்தேன். ஏதோ ஒரு புது மாதிரி 'பலிஷ்' வந்துவிட்டாற்போலத் தோன்றியது. ஒட்டிய கன்னங்களுக்கும், நீண்ட மூஞ்சிக்கும் எவ்வளவு பொருத்தமாக இருக்கிறது! நமக்கும் ஓர் அழகு வேண்டும் என்ற உன் மனத்தில் எழுந்த எண்ணத்தின்

பிரமையா? ரங்கன் வேடிக்கைக்காக எதையும் சொன்னவனல்ல. அவன் நட்பில் எனக்கு நம்பிக்கையுண்டு.

"உங்களுக்கு எடுப்பா அமைஞ்சு போச்சு, ஸார்! ஒரு நாலஞ்சு மாசங்களுக்கு 'லேஸ்' செய்து கொள்கிற போதெல்லாம் மீசையை மாத்திரம் இங்கே வந்து 'டிரிம்' பண்ணிக்குங்க! இவ்வளவு வருஷங்களா எனக்கு எப்படி இந்த ஐடியா தோணாமல் போச்சு. அதான் ஸைக்கிள் இருக்குதே. வீடு ஊர்க் கோடியில் இருந்தாலும் ஒரு மிதி மிதிச்சால் வந்துடலாங்களே."

வீட்டினுள் நுழைந்தபோது என் மனைவி 'இதென்ன கூத்து?' என்ற புன்னகையுடன் வரவேற்றாள். குழந்தைகளெல்லாம் புதிதாக வந்த விருந்தாளியைப் பார்ப்பது போல் எட்ட நின்றே வளைய வந்தனர். காரியாலயத்தில் ஒரே பரபரப்பு. என் இடத்துக்கு வராத நண்பர்கள் எல்லாம் கும்பலாக விசாரித்து விட்டுப் போனார்கள். வராந்தாவில் நடக்க முடியவில்லை. 'இப்பத்தான்யா நீ பார்க்கும்படியா இருக்கே' என்று இரண்டொருவர் பகிரங்கமாகவே என் இவ்வளவு வருஷத்திய தோற்றத்தை எத்தனை பொறுமையுடன் சகித்துக் கொண்டிருந்தார்கள் என்பதை வாய் விட்டுச் சொல்லிப் போயினர். ஜனநாயக ரீதியில் ரங்கன் வைத்த மீசை அங்கீகாரம் பெற்றுவிட்டது. ஆனால்...? கிராமத்திலிருந்து அப்பா வந்தார். அன்று மாலை வீட்டினுள் நுழையும்போது, சின்னப் பையன்போல் அப்பாவுக்கு எதிரே எப்படித் தலை காட்டுவது என்ற தவிப்புடன் நுழைந்தேன்.

"இதெல்லாம்தான் இப்போது 'பாஷனு'ப் போயிட்டுதே. அந்தக் காலத்தில் உன் சித்தப்பா பம்பாயிலே எல். எல். பி. படிக்கிற போது இப்படித்தான் இருப்பான்."

அப்பா என்றால் அப்பாதான். மீசை வைத்துக்கொண்டிருந்த சித்தப்பா வக்கீலுக்குப் படித்துவிட்டுத் திருச்சியில் ஏராளமாகச் சம்பாதித்த பின்னர் இளம் வயதிலேயே காலமாகி விட்டார். பல வருஷங்களுக்குப் பிறகு மீசையின் சாயலில் இறந்துவிட்ட தம்பியின் தோற்றத்தை ஒரே பிள்ளையான என்னிடம் நினைவுகூர்ந்து கண் கலங்கினார்.

மாதம் ஒரு முறை கிராப்புக்காகத்தான் எங்கள் சந்திப்பு என்றிருந்தது போக, மூன்று நாட்களுக்கு ஒரு முறை ரங்கனிடம் ஆஜரானேன். ரங்கனைக் கிட்டத்தட்ட பதினைந்து வருஷங்களாகத் தெரியும் எனக்கு. பெரம்பூருக்கு வந்த புதிதில் அவனிடம்தான் என் தலையைக் கொடுத்து விட்டு நிம்மதியாக இருக்கத் தொடங்கினேன். முதல் சந்திப்பை இன்னமும் நான் மறக்கவில்லை.

ஸ்டேஷனுக்கு எதிரேயிருந்த 'ராயல் சலூனில்' அப்போது அவன் வேலை செய்துகொண்டிருந்தான். எந்தப் புத்தகத்தையும் படிக்காமலே 'நண்பர்களைச் சிநேகம் செய்துகொள்வதெப்படி' என்ற அரும் கலையைத் தன் தொழில் துறைக்காகத் தெரிந்து வைத்திருந்தான். என் பட்டணத்து முதல் 'கிராப்பை' அவன்தான் வெட்டினான். என்னுடைய 'ரெட்டை' மண்டையிடம் எனக்கே ஒரு வெறுப்பு. குழந்தையாக இருந்தபோது எவ்வளவு வெந்நீர் ஊற்றிப் பிடித்துவிடப்



குழந்தைகள் எல்லோருமாகச் சேர்ந்து தாத்தாவுக்கு முன்கூட்டியே சொல்லி வைத்துவிட்டாற்போலத் தோன்றியது. வழக்கம்போல் அப்பா சிரித்துப் பேசிக் கொண்டிருந்தார். நான்தான் எப்படி ஆரம்பிப்பது என்று தெரியாமல், "மீசை வைத்துக்கொண்டிருக்கிறேன் அப்பா! உங்களுக்கு ஒன்றும் ஆக்ஷேபம்...?" என்று இழுத்தேன்.

எழுபது வயது அப்பா உலகம் அறிந்தவர். சிரித்தார். "எனக்கென்னடா ஆட்சேபம்?

பட்டிருந்த போதிலும் என் தலை யெழுத்துடன் இரட்டை மண்டையும் சாசுவதமாகி விட்டது. பொறுமையுடன் கிராப் செய்தான் ரங்கன். கிளம்பும் போது வாத்சல்

'அன்புக்கும் உண்டோ அடைக்கும் தாழ்'
என்பார்கள்.
இந்தக் கதாசிரியருக்குக் கிடைத்த ஆப்த நண்பர்
தனி ரகம்.
அவரது அனுபவத்தை விளக்கும்
விதமே அலாதி.

யத்துடன் 'ரொம்பவும் அதிர்ஷ்டமா இருப்பீங்க, ஸார் நீங்க! தலையின் 'ஷேப்'பைப் பார்த்தே சொல்லி விடுவேன், ஸார்' என்ற புகழுரையையும் கூறி வைத்தான். முகஸ்துதிக்கு மயங்காதவன் யார்? அந்த நிமிடம் முதலே என் ஆப்த நண்பனாகவே அவனைத் தீர்மானித்து விட்டேன். பிறகு யாரும் என் தலையைத் தொட விட்டதில்லை நான்.

என் அதிருஷ்டத்தில் என்னைவிட அவனுக்குத்தான் நம்பிக்கை அதிகம். எப்போதாவது நான் அபூர்வமாக எழுதும் கதைகளைப் படித்துவிட்டு, கிராப் செய்து கொள்ள வரும்போது மறக்காமல் பாராட்டி மகிழ்வான்.

''பிரமாதமாய் எழுதித் தள்ளிட்டீங்களே, ஸார்! ஒவ்வொருத்தன் எழுதறதைப் படிச்சா எனக்கு எப்படி வருது தெரியுமா? உங்களுக்கு நிச்சயம் என்னிக்காவது ஒரு 'சான்ஸ்' அடிக்கத்தான் போகுது, பாருங்களேன்'' என்று அங்கலாய்ப்பான்.

ரங்கன் பேசுவது ஒரு வேதாந்தியினுடைய பேச்சாகவே இருக்கும். ஆனால் லௌகீக வாழ்க்கையில் முன்னேற வேண்டும் என்ற துடிப்பில்லாத மரக்கட்டை அல்ல அவன்.

ஹைரோடில் பத்து வருடங்களுக்கு முன்பு தனிக் கடை வைத்த பின் ஏழைப் பெண்ணைப் பார்த்து முறைப்படி கல்யாணம் செய்து கொண்டான் ரங்கன். இப்போது நான்கு குழந்தைகளுக்குத் தகப்பனாகவும் ஆகி விட்டான். குடும்பத்தைப் பாசத்துடன் போற்றிக் காப்பாற்றும் அவன் பாங்கே மிகவும் ஜொலிக்கக் கூடியது. கடைக்குப் பின்புறமே வீடு. தனிக் கடை வைத்துவிட்டோம் என்கிற கர்வத்தில் ஆடம்பரத்துக்கு ஆட்களை வைத்துக் கூத்தடிப்பவன் அல்ல அவன். உறவுப் பையன்கள் சிலரைப் பரிவுடன் தயார்செய்து, பேராசையால் அவர்கள் ஓடி விட்ட பிறகும் பரிவு காட்டும் சமரச நோக்கு அவனுடையது.

ரங்கனுக்குத் தெய்வ நம்பிக்கை அதிகம். கடையில் பெரிதாகப் பிள்ளையார் படம் ஊதுபத்தி மணத்துடன் கொலுவிருக்கும். ஒரு பக்கத்தில் வள்ளலார் ராமலிங்க அடிகளின் படம்; மற்றொருபுறம் மௌனசுவாமிகளின் உருவம் பூக்கோலத்துடன் திகழும்.

சின்ன வயதிலேயே குடும்பப் பொறுப்பு அவன் மேல் விழுந்து விட்டது. ஊரில் நோயாளியான அண்ணனின் குடும்பப் பராமரிப்பு அவனையே சார்ந்தது. தாய், தகப்பன் கிடையாது. ஒரு கிழப் பெரியப்பாதான்—அப்பனுடன் கூடப் பிறந்தவர்—ரங்கனுக்குக் கார்டியன். ரங்கனின் குழந்தைகளைக் கட்டி மேய்த்துக் கொண்டு கடை வாசலில் கூப்பிட்ட குரலுக்கு ஏன் என்று கேட்பதுதான் பெரியப்பாவின் வேலை. மனைவியைக் கொண்ட இடத்திலும் வசதியில்லை. அவர்களையும் விட்டுக் கொடுக்காமல் பார்த்துக் கொள்ளத் தயங்க மாட்டான். பீடி, சிகரெட் முதலிய கெட்ட பழக்கங்கள் அவனை அண்டுவதற்கே அஞ்சும். உழைத்துச் சம்பாதித்து உற்றாரையும், உறவினரையும் மகிழ்விப்பதையே ஒரு நிறைவாகக் கருதுவான்.

மெஷினும், கத்தியும், கத்தரியும், சீப்பும் அவன் கைகளின் லாகவத்தில் சிறப்பாகச் செயல்பட்டு ரங்கன் கிராப்புக்குத் தனி மவுசையே ஏற்படுத்தியிருந்தன. அவரவர் அந்தஸ்துக்கேற்ப இதமாகப் பேசுவான். வாழ்க்கையின் கஷ்டங்களைக் கண்டு பொருமுவான்; வசதிகள் பெருகிவிட்ட நாகரிகத்தையும் மெச்சுவான். ரயில்வே ஒர்க்ஷாப், மில் தொழிலாளர் இளைஞர்களுக்கு 'ரங்கன்' என்றால் உயிர்.

பதினைந்து வருடங்களுக்கு முன்பு இருந்த பெரம்பூராகவா இருக்கிறது இப்போது? தொழிலகங்கள் பெருகி விட்டன; புதிய வீடுகள் ஏராளமாக முளைத்து விட்டன. பெருகும் ஜனத்திரளுக்கு ஏற்ப, புதிய சலூன்களும், லாண்டரிகளும், மற்றக் கடைகளும் வியாபாரத்தை அதிகமாக்கி என்றுமில்லாத அளவுக்கல்லவா சுறுசுறுப்பை உண்டுபண்ணி விட்டன?

ரங்கன் கடையிலும் கூட்டத்துக்குக் குறைவில்லை. அவனிடம் 'கிராப்' செய்துகொண்ட ஹைஸ்கூல் பையன்கள் மட மடவென்று வளர்ந்து, வேலைக்குப் போய் ஸ்கூட்டரிலும், மோட்டார் சைக்கிளிலும் புது உலகத் துடிப்பை உணர்ந்து கொண்டவர்களாய்ப் பறந்து கொண்டிருந்தனர்.

அதிக வருவாய்க்கேற்பச் செலவழித்துப் பழக்கப்பட்டுவிட்ட ரங்கனுக்குக் கையில் கொஞ்சம் காசு தங்கவில்லையே என்ற குறை இலேசாகத் தலைநீட்டியது. என்ன தோன்றிற்றோ தெரியவில்லை. கணிசமாகப் பணம் திரட்டி உறவுப் பையன் ஒருவனை வரவழைத்து மளிகைக் கடை ஒன்று போட்டான். போன வருஷம் நடந்தது இது. ஆறு மாதம் 'பிஸினஸ்' நடந்தது. போதிய அநுபவம் இல்லாமல் கடை நொடித்துப் போய்

விட்டது. 'இடி' விழுந்தது போல் ஆடி விட்டான் ரங்கன். ஆனால் பேச்சில் தைரியம் குறையவில்லை.

''என்ன ரங்கா, புதிய வியாபாரம் ஒன்றும் சரிப்பட்டு வரவில்லையா?'' என்று சமயசந்தர்ப்பம் தெரியாமல் கேட்டுவிட்டேன் அப்போது.

''அதெல்லாம் நமக்குச் சரிப்படாது ஸார்! நம்ப தொழில்தான் நமக்கு லாயக்கு. அதற்குக் கொடுப்பினை வேண்டும். ஸார், எல்லோரும் அவசரமாகப் பணம் பண்ணுகிறார்களே என்று நானும் ஆசைப்பட்டு ஒரு முயற்சி செய்தேன். தோற்றுப் போனேன். என் கத்திரியும், மிஷினும்தான் எனக்குச் சோறு போடும். மற்றவை வீண் ஆசை.''

அந்தத் தோல்வியை ஒரு பெரிய வாழ்க்கைப் படிப்பினையாக ஒப்புக் கொண்டுவிட்டவன் போலப் பேசினான். ஆனாலும் பணம் பண்ண வேண்டும் என்ற ஆசையால் உந்தப்பட்டு அந்த முயற்சியில் வீழ்ந்துவிட்ட அவனை உள்ளூற ஓர் ஏக்கமே பிடித்துக் கொண்டுவிட்டது போலத் தோன்றியது. எவ்வளவு வேகத்துடன் அந்த விபரீத ஆசை எழுந்ததோ, அதே வேகத்தில் வீழ்ச்சியையும் அது கொண்டு வந்து விட்டது.

கட்டை குட்டையான வாளிப்பான உடல் ரங்கனுக்கு. நோயே அறியாதவன். அடிக்கடி ஆயாசம் கொள்ளலானான். கடன் தொல்லை வேறு புதிதாக அழுத்தின. முன்போல் எல்லா வாடிக்கைக்காரர்களையும் அவனே கவனித்து அனுப்ப முடியவில்லை. அரை மனத்துடன் வேறு வழியின்றி ஓர் ஆளைக் கடையில் சேர்த்துக் கொண்டான்.

இந்தத் தடவை 'கிராப்பு'க்குச் சென்ற போது ரங்கனின் உடம்பைப் பார்த்ததும் எனக்கே 'பகீ'ரென்றது. உடம்பைப் பார்த்துக்கொள்ளுமாறு யோசனை கூறினேன். பதினைந்து வருடங்களுக்குப் பிறகு அவன் கண்ணெதிரிலேயே என் தலை அவனுடைய உதவியாளனுக்கு மாற்றப்பட்ட நிலைமையை வருத்தத்துடன் அங்கீகரித்து மூலையில் உட்கார்ந்து கொண்டான்.

''ஸாருக்குப் பார்த்துச் செய்யணும் கோவிந்தா. வேறு ஒருத்தர்கிட்டேயும் அவர் வெட்டிக்கிட்டதில்லை. இந்தப் பதினைந்து வருஷங்களாய்'' என்றுபெருமையுடன் சொன்னவன், ''மீசையை மாத்திரம் நீ விட்டு விடு. நான் கடைசியிலே சரி பார்த்து அனுப்பறேன்'' என்று கூறினான்.

அவன் குழந்தைகள் இருவர் 'நாஸ்தா'வுக்காகக் கடையினுள் ஓடி வந்தனர். நான் இதுவரை காணாத சலிப்புடன் அவர்களுக்குக் காசு கொடுத்து விரட்டினான். வேறொருவர் அப்போதுதான் 'கிராப்'பை முடித்துக் கொண்டு கிளம்பினார்.

''என்ன ரங்கா, இந்தத் தடவையிலேருந்து ஒன்னே கால் ரூபாயா? வர வர என்ன ஏறிக் கிட்டே போகுது?''

ரங்கன் கோபப்படவில்லை; ஆனாலும் பெரிதாகக் கிண்டல் செய்ய ஆரம்பித்துவிட்டான் அந்த ஆயாசத்திலும்.

''இன்னும் பத்து வருஷங்கள் கழிச்சுப் பாருங்க, என்ன ஆகப் போவுதுன்னு. ஒரு கிராப்புக்கு ஐந்து ரூபாய். 'ஹேர் டிரஸ்ஸிங் கார்ப்பரேஷன்'னு ஒண்ணு வந்துடும். பெரிய கட்டடத்திலே ஏராளமான ஆட்கள் அவனவன் இஷ்டப்படி இருப்பானுங்க. தலைகளையெல்லாம் செடி வெட்டற மாதிரி வெட்டித் தள்ளிக்கிட்டு இருப்பானுங்க. ரங்கன் கை 'சொகுசு' கிராப்பெல்லாம் இன்னும் கொஞ்ச காலத்துக்குத்தான். என்னை மாதிரி ஆளுங்களெல்லாம் பெரிய ஹேர் டிரஸிங் ஆபீஸரா எழுநூறு, எண்ணூறு என்று சம்பளம் வாங்கிக்கிட்டு, தூரத்திலே நின்னபடியே-சாய்வாக ஒரு பார்வை பார்த்து, 'ஓ.கே.'ன்னு சொல்லிக்கிட்டிருப்போம். கவுண்டரிலே ஐந்து ரூபா செலுத்தி ரசீது வாங்கினாத்தான் நாற்காலியிலேயே ஒக்கார்த்தி வைப்பாங்க; அதுக்கு 'க்யூ'விலே நிக்கணும். அப்போ என்ன சொல்லப் போறீங்களோ, தெரியாது.''

சிரித்துக் கொண்டே போய்விட்டார் அந்த மனிதர். ஆனால் ரங்கனுடைய வர்ணனை ஒரு பெரும் காட்சியாக என் மனக் கண் முன்பு விரிந்தது. காலம் தலைதெறித்து ஓடுகிற வேகத்தில் அதை வெறும் கற்பனையாகவே என்னால் பாவிக்க முடியவில்லை. சிரிப்பை என்னாலும் அடக்க முடியவில்லை. ரங்கன்

## பித்தலாட்டம் பிறந்த விதம்!

பித்தளை பொன்று, ஏறக்குறைய அதே நிறத்தில் இருப்பது தங்கம். தங்கத்தில் ஆடகம், கிளிச்சிறை, சாதரூபம், சாம்பநாதம் என நான்கு வகைத் தங்கம் உண்டு. அதில் ஆடகம் என்ற சொல்லுடன் பித்தளையைச்




சேர்த்துப் பித்தளை ஆடகம் எனப்பட்டது! அதாவது பித்தளையைத் 'தங்கம்' எனக் கூறி ஏமாற்றுவது என்னும் பொருள்பட்டு 'பித்தளை +ஆடகம்' என்னும் சொல் 'பித்தலாட்டம்' என மருவி வழங்கலாயிற்று.

(வாரியார் சொற்பொழிவில் கூறியது)

தகவல்: ப. சிங்காரவேலன்.

என்னையும் விடவில்லை. தொடர்ந்து கூறினான்:

"என்ன ஸார், நான் சொன்னது நடக்காதுன்னுட்டோ கேக்கிறீங்க. நாளும் நீங்களும்தான் அன்னிக்கு இருந்த மாதிரியே இப்பவும் இருந்துக்கிட்டிருக்கோம். உலகம் எப்படிப் பறக்குது, தெரியுமா? நீங்க ஆபீஸிலே இடுப்பை ஒடிச்சுக்கிட்டு ஓர் இருநூறு ரூபாயும், பத்தாமப் போனா முப்பதுக்கும், நாப்பதுக்கும் கதை எழுதி இன்னும் கொஞ்சமும் சம்பாதிப்பீங்க. நான் என்ன வாழ்ந்தேன்? எவ்வளவு சம்பாரிச்சிருப்பேன்? கையில் காலணா தங்கல்லே. ஆனா எதிர்காலம் இப்படியேஇருந்துடாது. சின்னச்சின்னத்தொழில்களுக்கெல்லாம் இனிமே எங்கே மவுசு? இப்பவே நம்ப பசங்க இந்தத் தொழிலுக்கு வர மாட்டேங்குது. அப்போ, ஹேர் டிரஸிங் கார்ப்பரேஷன்தான் பெரிசா வைப்பாங்க! என்னையெல்லாம் எழுநூறு, எண்ணூறுன்னு பெரிய ஹேர்டிரஸிங் ஆபீசராகப் போடாமெ, என்ன செய்வாங்க! எனக்கும் அந்த மாதிரி மொத்தமா ஏதாவது பார்த்தால்தான் விடியும் போல் தோணுது. ஏன் ஸார், நீங்களும் ஒரு நல்ல கதையா எழுதி 'சினிமா சான்ஸ்' தள்ளிட்டு நாலாயிரம், ஐயாயிரம் தட்டிக்கிட்டுப் போகப்படாது? எவ்வளவு நாட்களாச் சொல்லிக்கிட்டிருக்கேன், உங்ககிட்டே!"

ரங்கன் அதிகாரியாகிப் போய், நான் பின் தங்கிவிடப்போகிறேனே என்ற பச்சாத்தாபத்தில் என்னிடம் காட்டிய பரிவு, அவன் உள்ளத் தாய்மையை நினைத்து வியக்கச் செய்தது. மனிதர்களில் ரங்கன் எவ்வளவு உயர்ந்தவன்! மறக்காமல் அவன் தன் கையாலேயே மீசையை 'டிரிம்' செய்து அனுப்பினான்.

**ப**த்து நாட்களுக்கு அந்தப் பக்கமே தலை காட்டவில்லை நான். ரங்கனின் எச்சரிக்கையை மறந்து ரேஸரில் என் இஷ்டப்படி மீசையை அலங்கோலமாக்கிக் கொண்டு அதன் கோர சொரூபத்தைக் கண்ணாடியில் காணச் சகிக்காமல் மீண்டும் ரங்கனையே புகலடைய விரைந்தேன்.

கடை வாசலில் பெரியப்பா மௌனி உட்கார்ந்து கொண்டிருந்தார். உள்ளே ரங்கனைக் காணோம். யாருமே இல்லையா? அந்த மௌனமே என்னுள் ஒரு பயங்கர அவஸ்தையைத் தோற்றுவித்தது.

"பெரியவரே, ரங்கன் இல்லையா?" மௌனி எனக்குப் பதில் சொல்ல மெதுவாக எழுந்தார். கொஞ்சம் செவிடு போலே.

"சாமி! உங்களுக்குத் தெரியாதுங்களா?"

நான் வாயடைத்து நின்றேன்.

"ரங்கன் போயிட்டானுங்க, சாமி! போயிட்டானுங்க. இன்னிக்கு அஞ்சு நாளாவுது. போன சனிக்கிழமை திடீர்னு வீட்டுலே மயக்கமா விழுந்துட்டான். ஆஸ்பத்திரி வண்டியிலே எடுத்துப் போட்டுக்கிட்டு, பெரிய ஆஸ்பத்திரிலே கொண்டு போய்ச் சேர்த்தோம். என்னமோ இருதய நோவுங்களாம். ரெண்டு நாளைக்கு உயிருக்கு மன்றாடிக்கிட்டுக் கிடந்தான். செவ்வாய்க் கிழமைபன்னிக்கு எல்லாம் அடங்கிப்போச்சுங்க. நாலு குழந்தைகளையும், அவளையும் இப்படி நிர்க்கதியா விட்டுட்டுப் போயிட்டானே சாமி! உங்களுக்குத் தெரியாமப் போயிடுச்சுங்களா?"

வயதில் தளர்ந்த அந்த உடல் விம்மிக் கேவியது! உலகமே சுழல்வதுபோல் இருந்தது எனக்கு. ரங்கனுக்கு மரணமா? அதை எப்படி நான் நம்புவேன்? அவன் மனைவியும், குழந்தைகளும் இனி ஆதரவின்றித் தவிப்பார்களே?

எண்ணத்திலும், பேச்சிலும், செயலிலும் நல்லவனாக வாழ்வதையே உயர்ந்த லட்சியமாகக் கடைப்பிடித்த அந்தச் செயல் வீரனின் நிழலில் அண்டியிருந்தவர்களுக்குத் தவிப்பு ஏது?

உள்ளே கண்ணாடியில் தெரிந்த என் உருவம் கண் கலங்கி நின்றது. அழுவதற்குக் கூடத் தெம்பில்லையா? கோயில் மணி மாதிரி மனம் மாத்திரம் 'ரங்கா, ரங்கா' என்று ஓயாது அலறியது. எனக்கு வரப்போகும் அதிருஷ்டத்தைக் காணாமல் எப்படி ரங்கன் என்னை விட்டுப் பிரிந்தான்? என் மீசையிலும் முகத்திலும் அழகைக் கண்ட அந்தக் கலைஞனை இனி எப்போது காண்பேன்?

வீட்டுக்குத் திரும்பியதும் முதல் காரியமாக மீசையை வழித்து எறிந்தேன். ரங்கனுடைய பிரிவின் துக்கத்தைக் கொண்டாடும் புனிதச் சடங்காகவே அதை மதித்தேன். களையிழந்த என்னுடைய முகம் கண்ணீரைக் கொட்டி அவன் ஞாபகத்துக்காக அழுது தீர்த்தது.

# காலமெல்லாம் கல்விக்கே!

டாக்டர் ஸ்ரீஹரி

ஸ்ரீ நாககப்பிரமணிய அய்யர் சென்னைக்கு வந்திருக்கிறார் என்ற செய்தியைக் கேட்ட போது அதில் நம்பிக்கையே ஏற்படவில்லை. அதிலும் அவருடைய மூத்த மகன் வீட்டி லிருக்கிறார், பேத்தியின் வீட்டிலல்ல என்ற போது சந்தேகமும் வியப்பும் ஏற்பட்டன.

பந்த பரிபாலனை நிமித்தம் நல்லது பொல்லாததற்குக்கூட ஊரை விட்டுச் செல் வதை விரும்பாது பாபநாசத்துப் பள்ளிக் கூடத்துக்காக அல்லும் பகலும் உழைப்பவ ராயிற்றே! இப்போது எப் படிச் சென்னைக்கு வந்து கிட் டத்தட்ட மூன்றுமாத கால மாகத் தங்கியிருக்கிறார்?

ஆம்! ஆக்கத் துறையில் காந்தியத்தை ஏற்றுச் சுமார் நாற்பது வருஷ காலத்துக்கு மேல் விளம்பரம் ஏதுமே இல்லாது அல்லும் பகலும் பாடுபட்டு வருபவர். காந்தி ஜியின் திட்டப்படி ஆதாரக் கல்வி முறையைத் தழுவிப் பல பள்ளிகளை நிறுவி வெற் றிகரமாக நடத்திக் காட்டிப் பிறகு அவை என்றென்றும் நிலைத்து நடைபெறும் வகை யையும் வகுத்தவர்.

ஏதோ ஓர் ஊரிலுள்ள பிள்ளைகளை ஒன்று சேர்த்து ஓர் ஆரம்பப் பள்ளிக்கூடத் தைத் தொடங்குவார் ஸ்ரீ நாககப்பிரமணிய அய்யர்! தாமே ஏற்று நடத்துவார். உதவிக்குத் தக்கவரை உள்ளூரிலேயே தேர்ந்தெடுத்துத் தமது லட்சியத்தை ஏற்பவராயின் பள்ளிக் கூடத்தில் தமக்குத் துணையாசிரியராக ஏற்பார். உபாத்தியாயருக்கான சம்பளத் தையும் கொடுக்கத் தவற மாட்டார்.



ஸ்ரீ நாக அப்பிரமணியம்

பள்ளிப் பிள்ளைகள் பாடங்கள் படிப்பதல் லாது கைத்தொழில்களும் பயில வேண்டு மென்பது இவரது திட்டம். இப்பிள்ளைகள் தயாரித்த கூடை, நாட்டுமாட்டுச் சாமான் களின் விற்பனை, இவர்கள் பயிரிட்ட காய் கறிகள் விற்பனை, நூல் நூற்றல், நெய்தல் ஆகிய பணிகளால் ஈட்டிய பொருள்களைப் பள்ளியை நடத்த உபயோகிப்பார்.

பள்ளிப் பிள்ளைகளைக் கொண்டு (சிறு முறை நாடகங்களில்) நாடகங்கள் நடத்தியும், விழாக்களை அடுத்துத் தெருத் தெருவாகவும் ஊர் ஊராகவும் சென்று கும்மியடித்தும், கோலாட்ட நிகழ்ச்சிகளை நடத்தியும் பொருளீட்டுவார்.

தனிகர்களின் குழந்தைகள் பள்ளியில் சேரும்போது, அவர்களின் பெற்றோரை மேலும் ஒன்றிரண்டு குழந்தைகளைக் கவிகார மக்களாக ஏற்று அவர்களுக்கும் பள்ளிக் கூடச் சம்பளத்தைக் கட்டும்படி இணங்கிப் பெற்று விடுவார்.

இப்படிப் பல்வேறு வகையில் பணத்தைத் திரட்டித் தமது பள்ளிக்கூடம் மேலும் மேலும் வளர வகை செய்வார். அரசாங் கத்து மான்யமும் கிடைக்குமே!

இப்படி வளரும் பள்ளியானது ஹையர் செகண்டரி மட்டத்தை எட்டும் போது அதற்கென ஒரு கட்டடம், விளையாட்டு மைதானம் என்பது போன்றவை யாவும் ஏற்பட்டு விடும். நல்ல நிலையை அடைந்த நோத்தில் அப் பள்ளியின் நிர்வாகப் பொறுப்பைத் தக்கவரிடம் ஒப்படைத்து விட்டுத் தாம் விலகி, வேறோர் ஊருக்குச் சென்று மற்றொரு புதிய பள்ளியைத் தொடங்குவார்.

ஹரிஜனங்கள் உட்பட ஒதுக்கப்பிள்ளைகள் யாவரும் மற்றும் இல்லாமிய கிறிஸ் துவப் பிள்ளைகளும் ஒரு தாய் வயிற்றுப் பிள்ளைகள் போல ஒன்று சேர்ந்து படிக்கவும், கைத்தொழில்கள் பயிலவும் ஏற்பாடு செய்து செயல் படுத்தியது இவர் திட்டத் தின் ஒரு தனிச் சிறப்பு.

காலையில் இறை வணக் கம் செய்யாது பள்ளி வேலை தொடங்குவதில்லை. மாலையில் இறை வணக் கம் செய்யாது அன்றைய வேலைகள் முற்றுப் பெறுவதில்லை. இதில் ஒதிந்து முறையைத் தழுவிய சில வடமொழி 'சுலோகங்களும், தேவாரம், திருப்புகழ் போன்றவற்றிலிருந்து சில பகுதிகளும் குரான் புனித பைபிள்களி லிருந்து பொறுக்கி எடுத்த பாகங்களும் இடம் பெற்று காந்தீயத் தொழுகை முறை யைப் பின்பற்றுவதா யிருக்கும். ஊரில் உள்ள முதியோர்களும் பல சமயங்களில் இந்தத் தொழுகையில் கலந்து கொள்வர். இக் கூட்டுத் தொழுகை முறை இக்கல்வித் திட்டத்தின் மற்றொரு சிறப்பான அம்சம்.

ஆதாரக் கல்வித் திட்டத்துக்கு இவர் பள்ளிகள் ஓர் எடுத்துக்காட்டாகும் என்று





கல்வி இலாகா அதிகாரிகளால் புகழுரை பெற்ற வகையில் திட்டம் நடந்தது.

இப்பள்ளிகளில் இளமையில் படித்தவர்களுள் பிற்காலத்தில் உயர்ந்த நிலையை அடைந்தவர் பலர். அவர்கள் தொடர்ந்து இவரது புதுப் பள்ளிகளுக்குத் தேவையான ஆதரவைத் தாராளமாக வழங்கி வந்தனர்; வழங்கி வருகின்றனர்.

ஜனாப் எஸ்.ஏ.கே. உபயதுல்லா ஸாஹிப் பகதூர் பார்லிமெண்டரி அங்கத்தினர், குவாலம்பூர் — திரு எம். ஜி. ராஜாராம் ஐ.ஏ.எஸ். போன்ற பல பிரமுகர்கள் இவரது பழைய பள்ளி மாணவர்கள்.

இராஜகிரியில் உள்ள ''காளியியா செகண்டரி ஸ்கூல்'', வழுத்தூரிலுள்ள ''ஹையர் எலிமெண்டரி ஸ்கூல்'', அய்யம்பேட்டையில் உள்ள ''போர்டு ஹைஸ்கூல்'', பாபநாசத்திலுள்ள' 'விக்டோரியா ஹை ஸ்கூல் — வித்யா பாடசாலை' ஆகியவை இவரால் ஆரம்பிக்கப்பட்டு மேற்சொன்ன வகையில் வளர்ந்தபின் தக்கவரிடம் மேலும் தொடர்ந்து நடத்த ஒப்படைக்கப்பட்டவையாகும்.

இவர் ஒதுங்கும் போது நடத்தி வந்த ஐயம்பேட்டைப் பள்ளியில் 800 மாணவர்கள் படித்து வருகின்றனர்.

ஸ்ரீ நாககப்பிரமணிய அய்யரைக் காண வேண்டி அவர் இருந்த அன்னாரின் மகன் வீட்டுக்குப் போயிருந்தேன்.

ஆஜானுபாகுவான மனிதர் பீஷ்மன் அம்புப் படுக்கையில் கிடந்த காட்சியை நிரூபிக்கும் வகையில் படுத்திருந்தார். கண்டு திடுக்கிட்டேன். இவருக்கா? நிஜமாகவா?

செல்லப் பேத்தியின் மகளொருத்தி அய்யரின் அருகில் அமர்ந்து அந்த வாரத்திய ''கல்கி''யில் ராஜாஜியின் கருத்துக்களைப் படித்துக் கொண்டிருந்தாள். அந்த நிலையிலும் ஸ்ரீ அய்யரவர்கள் சிறுமி தட்டுத் தடுமாறிப் படிப்பதைக் கேட்டுச் சிரித்து ரஸித்துச் சரியாகப் படிக்க உதவி செய்து கொண்டிருந்தார்.

சற்று மறைவாக நின்றிருந்த ஸ்ரீ அய்யரின் செல்லப் பேத்தி அய்யரின் நோயைப் பற்றி அவரிடம் பிரஸ்தாபிக்க வேண்டாம் என்று கண்ணாலும் உதட்டாலும் மற்றும் சாடைகளாலும் என்னை எச்சரித்தாள்.

அதிர்ச்சியிலிருந்து நான் விடுபடவில்லை. ஆனால் அதற்குள் ஸ்ரீ அய்யரின் பார்வை என் மேல் விழவே, ''வாருங்கள்'' என்று வரவேற்றார். அவர் அருகில் சென்று உட்கார்ந்தேன்.

''சரி! (என்று நெடு நேரமாகப் பேசிக் கொண்டிருந்த பேச்சைத் தொடருபவர் போல்) ராஜாஜி உடல்நலமாக இருக்கிறாரா?'' என்று கேட்டார்.

என் வியப்பு அளவு கடந்ததாயிற்று.

''ரொம்ப அபூர்வமான அவதார புருஷர் ராஜாஜி. லோகத்தில், 'அப்பிரியாணிச ரத்யாணி வக்தா ச்ரோதாச துர்லபா:' என்பதுபோல் அப்பிரியமானதானாலும் ஹிதத்தைச் சொல்பவரும் அதைக் கேட்பவரும் துர்லபமானவர். அப்பிரியமானாலும் ஹிதத்தைச் சொல்ல ராஜாஜி இருக்கிறார். அதைக் கேட்கவும், ஏற்கவும் நம்முள் எத்தனை பேர் இருக்கிறோம்? என்னால் முடிந்த வரையில் ராஜாஜியின் உபதேசங்களைக் கேளுங்கள் என்று ஊரிலிருந்த வரையில் அந்த வட்டாரத்தில் சொல்லி வந்தேன். இனி....'' என்று கையை விரித்தார். நான் மௌனமாகத் தலையை அசைத்தேன்.

பிறகு, ''ஏன், விரைவிலேயே நீங்கள் திரும்பிச் சென்று பள்ளிக்கூடத்தையும் பிரசாரப் பணியையும் மறுபடியும் ஏற்பீர்கள்....'' என்றேன்.

அய்யர் தலையை ஆட்டினார். ''இல்லை, பள்ளிக்கூட நிர்வாகப் பொறுப்பை.....'' சற்று நிதானித்து ''800 பிள்ளைகள். நல்ல கட்டடம்..... உம்.... எல்லாம் சிறப்பாக உள்ளது. அதைப் பஞ்சாயத்து யூனியனிடம் ஒப்படைத்துவிட்டு வந்து விட்டேன். ஒரு வழியாக'' என்றார்.

நான் பேசத் தொடங்குமுன் அவரே சுருக்கமாக விஷயத்தை விளக்கி விட்டார்.

''மந்தை மந்தையாய் யானைகள் காட்டில் வாழ்கின்றன. ஒரு யானையாவது அவற்றுள் இறந்ததென்று அதன் பிணத்தையோ, எலும்புக் கூட்டையோ கண்டவருண்டா?

''தனக்கு மந்தையை விட்டு விலக வேண்டிய வேளை வந்து விட்டதென்று எப்படியோ தெரிந்து கொள்ளும் யானை — தன் அந்திம காலத்தில் எங்கேயோ போய் விடுகிறது. போகும் போது மந்தை யானைகளும் கண்ணீர் விட்டபடி சித்திரம் போல் நிற்கும். அந்த ஒரு யானை மட்டும் யாரோ வழி காட்ட அவ்வழியே போகும். மறுபடியும் அது திரும்பி வந்து மந்தையில் சேருவதில்லை. ஏன்? திரும்பி வருவதே இல்லை. அப்படித்தான் நானும் வர வேண்டிய இடத்துக்கு வந்துள்ளேன். பிரயாணம் தொடங்கியாயிற்று. அவ்வளவு தான்'' என்றார்.

மறுபடியும் நான் பேசத் தொடங்குமுன்...

''ஆமாம், இந்த ஆரம்பக் கல்வி, ஆதாரக் கல்வி இவை பற்றி ராஜாஜியின் திட்டம் ஒன்று உண்டே! அதைப் பற்றி அவர் ஏனோ பிரசாரம் பண்ணாமலும் எழுதாமலும் இருக்கிறாரே!'' என்றார். ஆனால் என் பதில் எதையும் அவர் எதிர்பார்க்கவில்லை.

இதற்குள் நர்ஸ் யாரோ மருந்தைக் கொடுக்கவோ படுக்கையை மாற்றவோ வந்தார். நானும் ஸ்ரீ அய்யரிடம் விடை பெற்று வந்தேன்.

நான்கு நாட்களுக்கெல்லாம் 1885ல் தோன்றிய அய்யர் 1965 (டிசம்பர் 24—25ல்) பூத உடலை நீத்தார் என்றறிந்தேன்.

தன்னலமென்பதே இல்லாமல், காலமெல்லாம் கல்விக்காக உழைத்துதவிய ஒரு நல்லார் தமக்காக வீடு வாசல் நிலம் வேறு ஆஸ்திகள் ஏதாவது சேர்த்தாரா? சலிப்பின்றி உழைத்த கரங்களில் — தன்னலமற்ற பிறருக்குதவும் சிறப்புச் செயல்களில் நேசத்தின் நிறைவைக் காண்கிறோமல்லவா?

சமீபத்தில் சென்னை மாநகரத்துக்கு ஓர் அரிய பெரிய பாக்கியம் கிடைத்தது. வேதம் சம்பந்தப்பட்டவரையில் இது சரித்திர முக்கியத்துவம் வாய்ந்தது என்று சொல்லலாம். அதாவது இந்தியாவிலேயே முதன் முறையாக, தற்போது நாம் அறிந்துள்ள எல்லா வேத பாகங்களையும் பற்றி உபந்யாசத்தைக் கேட்கும் வாய்ப்பு சென்னைவாசிகளுக்குக் கிடைத்தது. மயிலாப்பூர் ஸம்ஸ்கிருதக் கல்லூரி ராமகப்பா சாஸ்திரி மண்டபத்தில் ஸ்ரீ அக்னிஹோத்ரம் ராமானுஜ தாதாசாரியார் சுமார் இருபது தினங்களுக்கு வேதங்களைப் பற்றிக் காலை மாலை இரு வேளைகளிலும் உபந்யாசம் செய்தார். பேட்டையில் உள்ள சென்னை ஸம்ஸ்கிருத சபையார் இதற்கு ஏற்பாடு செய்திருந்தார்கள். ஸம்ஸ்கிருதப் பேராசிரியர்கள் பலரும் அறிஞர்களும் தொடர்ந்து உபந்யாசங்களை உற்சாகத்துடன் கேட்டார்கள். ஸ்ரீ தாதாசாரியர் அவர்கள் ஒவ்வொரு வேத பாகத்தையும் எடுத்துக் கொண்டு, அவைகளின் ஸ்வரூபம், அவைகளில் சொல்லப்படும் விஷயம் இவைகளை விஸ்தாரமாக விளக்கினார்.



கடந்த முப்பது வருஷங்களாக தாதாசாரியார் ஆராய்ச்சி செய்து கொண்டிருப்பதால் அபூர்வமான வேத பாகங்களை எடுத்துச் சொன்னது சபையோர்களை ஆச்சரியத்தில் ஆழ்த்தியது. தெய்வக் கருத்துக்களை ரிக் வேதத்திலும், யாகக் கருத்துக்களை யஜுர் வேதத்திலும், வாழ்க்கைக்குத் தேவையான அம்சங்களை அதர்வ வேதத்திலும் பார்க்கலாம் என்றும் எடுத்துக் காண்பித்தார். வேதத்தில் உள்ள தெய்வக் கருத்து சைவ, வைணவ சாக்த வழிபாடுகளுக்கு எப்படி மூலமாக அமைந்திருக்கிறது என்று விளக்கினார். உருவில்லாத வழிபாடு, உருவ வழிபாடு இரண்டுக்குமே வேதம் வழிவகுக்கிறது என்று விரித்துக் காட்டினார். அரசியலைப் பற்றிப் பேசுவது வேதத்தின் தனிப் பெருமை என்று விளக்கி, உண்மையான ஜனநாயக தத்துவம் எப்படி இருக்கும் என்பதற்கு வேதத்திலிருந்து அருமையான மேற்கோள்கள் காண்பித்தார். மனித வர்க்கம் பரஸ்பரப் பிரேமையோடு வாழ வேணும்; ஒருவரை யொருவர் மதித்து நடக்க வேணும்; சமமான பொறுப்புடன் வாழ வேணும் என்பது போன்ற உயரிய கருத்துக்களை வேதத்திலிருந்து எடுத்துக் காண்பித்தார். வேதங்கள் காவிய ரசத்தைக் கையாண்டே ஆன்மிகக் கொள்கைகளை விளக்கும் அழகை இன்னொரு நாள் விளக்கினார். வேதங்களில் உள்ள கதைகளைப் பற்றிச் செய்த உபந்யாசம் மிகவும் கவர்ச்சிகரமானது. சிறிய சிறிய கதைகளாய் இருந்தாலும் அவைகளில் உள் அடங்கி யிருக்கும் கருத்துக்கள் எவ்வளவு பெரியவை என்று விஸ்தாரமாக விளக்கினார்.



# ஊர் வம்பு

- அரிய பாக்கியம்
- சூடிக்கொடுத்தசுடர்க்கொடி
- புத்தாண்டில் தமிழ்ப் பரிசு
- எம். ஜி. ஆர். வீட்டில் திருமணம்

உபந்யாசத் தொடர் முடியும் தினத்தன்று மத்திய அரசாங்க மந்திரி ஸ்ரீ வி. ஆர். பட்டாபிராமன் தலைமை வகித்தார். ஸ்ரீ கே. பாலசுப்பிரமணிய ஐயர் நவீன உலகத்துக்குப் புரியும்படி புராதன தத்துவங்களை விளக்கிய தாதாசாரியாருக்கு வாழ்த்துக் கூறினார்.

• • • •

கலா நிகேதன் பன்னிரண்டாண்டுகளாகக் கலைத்துறையில் இணையற்ற சேவை செய்து வருகிறது. அதன் பன்னிரண்டாவது ஆண்டு விழா அண்மையில் விமரிசையாக அண்ணாமலை மன்றத்தில் தொழில் அமைச்சர் ஆர். வெங்கடராமன் அவர்கள் தலைமையில் நடைபெற்றது.

''சூடிக் கொடுத்த சுடர்க் கொடி'' என்னும் நாட்டிய நாடகம் நடனமணி பாலுவின் மாணவி குமாரி பத்மாவினால் தயாரிக்கப்பட்டு நடத்திக் காட்டப்பட்டது. மேற்படி நாடகத்தில் பங்கெடுத்துக் கொண்ட சிறுமியர் அதியற்புதமாக, பாவத்துடன் நடித்தனர். குறத்தியாக நடித்த குழந்தையும், பால ஆண்டாளாக நடித்த குழந்தையும் சபையோரின் பாராட்டைப் பெற்றனர். பின்னணி இசை மிக நன்றாக அமைந்திருந்தது. குழந்தைகளுக்கு மத்தியில் குமாரி பத்மாவும் (படம்) சில காட்சிகளில் தோன்றினார். ''சூடிக் கொடுத்த சுடர்க்கொடி'' நாடகம் மிகமிக விறுவிறுப்பாக அமைந்து, மெச்சும்படி யிருந்தது.



பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள் தமிழ் மொழியில் வரவேண்டும் என்ற ஆசையைத் தமிழ் வெளியீட்டுக் கழகத்தினர் புத்தாண்டு தினத்தில் பூர்த்தி செய்திருக்கிறார்கள். பொருளாதாரம், அரசியல், வரலாறு, தத்துவம், புவியியல், கணிதம், விஞ்ஞானம், உளவியல், புள்ளியியல், மருத்துவம், பொறியியல், சட்டம் முதலான துறைகளில் நாற்பத்து நான்கு புத்தகங்கள் வெளிவந்துள்ளன. முதன்மந்திரி பக்தவத்ஸலம் அவர்கள் விழாவுக்குத் தலைமை தாங்க, பிரதம நீதிபதி அனந்தநாராயணன் இந்நூல்களை வெளியிட்டார்.

தமிழ் வெளியீட்டுக் கழக நூல்களை மக்கள் வாங்க வேண்டும், இல்லாவிடில் இவற்றை வைக்கச் சர்க்கார் ஒரு பெரிய கட்டடமே கட்ட வேண்டியிருக்கும் என்று முதன்மந்திரி தெரியப்படுத்தினார். மக்களுக்குப் புரியும்படியாக எளிய முறையில் எழுதப்பட்ட தரமான நூல்களாயிருந்தால் அவை கட்டடத்தை அலங்கரிக்க வேண்டியிராது. மக்கள் வாங்கி விடுவார்கள். சிந்தனைத் தேக்கமிருந்தால் நூல்கள் தேக்கமும் வந்து, பிறகு அதற்குக் கட்டடம் கட்ட வேண்டிய அவசியமும் ஏற்பட்டு விடலாம்!

இந்தத் தமிழ்த் துறையின் முயற்சியினால் கல்கத்தா சர்வகலாசாலையில் தமிழ் கற்பிக்கும் திட்டத்துக்கு வழியேற்பட்டிருக்கிறது. டில்லி, பெங்களூர் தமிழ்ச் சங்கங்களின் வளர்ச்சிக்குத் தமிழ் நாட்டு சர்க்கார் ஒரு லக்ஷம், ஐம்பதாயிரம் ரூபாய் நன்கொடை வழங்கியுள்ளது.

இந்தப் புத்தாண்டு தினத்தில் மற்றொரு விசேஷ அம்சம் சென்னை அரசினரின் தமிழ் வளர்ச்சி ஆராய்ச்சி மன்றம் பதினொரு எழுத்தாளர்களுக்கு ஆயிரம் ரூபாய் பரிசு வழங்கிக் கௌரவித்ததாகும். கவிதைக்காகத் தமிழண்ணல், நாவலுக்காக ஆர். சூடாமணி, நாடகத்துக்காகத் திரு கு. அழகிரிசாமி, ஆராய்ச்சி நூலுக்காகத் துரை அரங்கசாமி, வானவியலுக்காகத் திரு கிருட்டிணமூர்த்தி, தொழில் நுட்பவியல் துறையில் திரு மா. க. சம்பந்தனும், திரு கே. எஸ். லட்சுமணனும், உடலியல் துறையில் திரு சேஷாத்திரிநாதன், சமயத்துக்காக, ஸ்ரீமதி கிருஷ்ண வேணி அம்மையார், சிறுகதைக்காகப் பூவை எஸ். ஆறுமுகம், வாழ்க்கை வரலாறுக்காக மறை. திருநாவுக்கரசு ஆகியோர் பரிசுகளைப் பெற்றனர். புத்தாண்டு தினத்தில் இப்படிப் பரிசில்கள் பெற்ற எழுத்தாளர்களைப் பாராட்டுகிறோம்.

• • • •

லீலாவதிக்கும், டாக்டர் எச். ரவீந்திரநாதனுக்கும் சென்ற மாதம் ராஜேசுவரி கல்யாண மண்டபத்தில் அறிஞர் அண்ணா அவர்களின் தலைமையில் திருமணம் நடைபெற்றது. இவர்களது திருமணம் விசேஷமாக அனைவரது கவனத்தையும் கவரக் காரணம் மணமகள் புரட்சி நடிகர் எம். ஜி. ஆரின் சகோதரர், எம். ஜி. சக்கரபாணியின் குமாரத்தி என்பதுதான். தமிழகத்தின் வெள்ளித் திரையின் நடிக நட்சத்திரங்கள் அனைத்தும் அன்று அங்கு சுடர் விட்டுப் பிரகாசித்தன. படாதிபதிகள் அனைவரும் பிரசன்னமாயிருந்தனர். மணப் பந்தல் முழுவதும் சினிமாத் தொழில் சம்பந்தப்பட்ட கலைஞர்களும், சினிமா ரசிகர்களுமாகவே இருந்தனர்.

அறிஞர் அண்ணா அழகியதொரு சொற்பொழிவு நிகழ்த்தி மணமக்களை வாழ்வாங்கு வாழும்படி கேட்டுக் கொண்டு வாழ்த்துரை வழங்கினார். அடுத்தபடியாகப் பெரிய அமைச்சர் வெங்கடராமன் ''மணமக்கள் எல்லா நலன்களும் பெற்று எல்லாம் வல்ல இறைவன் அருளால் நீடுழி வாழவேண்டும்'' என்று சுருக்கமாகத் தமது வாழ்த்துரையை முடித்துக்கொண்டார். ஆனால் சபையோரின் கரகோஷம் தொடர்ந்து எழுந்தது. அமைச்சர் இறைவனருளை இந்த இடத்தில் கோரியதுதான் கரகோஷத்தின் காரணம் என்று தெரிய வந்தது.

அபார யோசனை!





# சேவைக்கு ஒரு சகோதரி

மோனிகா ஃபெல்டன்

— அருந்ததி

உடன்கட்டை ஏறும் பழக்கத்தைப் பிரிட்டிஷார் தடை செய்தும் சில இடங்களில் சட்டம் மீறப்பட்டது. ஆனல் இந்நிகழ்ச்சிகள் எண்ணிக்கையில் அதிகம் இல்லை. பிரிட்டிஷ் இந்தியாவின் பெரும் பகுதிகளில் விதவைகளைக் கொளுத்தும் பழக்கம் சீக்கிரமே மறைந்துவிட்டது. ஸதி ஒழிப்பில் பிரிட்டிஷார் நூறு வருஷங்களுக்கு முன் தீவிரம் காட்டியிருந்த போதிலும் பொதுவாக மதச் சார்புடைய விஷயங்களில் அவர்கள் அதிகம் தலையிடுவதேயில்லை.

குழந்தை விவாகப் பழக்கத்தைத் தடுக்கும் சட்டம் எதுவுமே 1925 வரை தோன்றி இருக்கவில்லை.

1891ஆம் ஆண்டு ஒரு சட்டம் கல்யாணப் பெண்கள் பன்னிரண்டு வயதாகும் வரை கணவனுடன் சேரக் கூடாது என்று தடை செய்தது. அந்தச் சட்டம் நடைமுறையில் அமுலுக்குக் கொண்டு வரப்படவேயில்லை. முப்பது வருடங்கள் கழித்தும் இப்படி ஒரு சட்டம் இருக்கிறது என்பதே வழக்கறிஞர்களைத் தவிர வெகு சிலருக்குத்தான் தெரியும். சட்டம் என்று இருந்தாலும்கூட, அதை நிறைவேற்றி வைப்பது மிகவும் கடினம் என்பதை எல்லோரும் ஒப்புக் கொண்டார்கள்.

இந்தியாவின் பெரும் பகுதிகளில் குழந்தை விவாகம் என்பது பிராமணக் குலத்தில் மட்டும் இருக்கவில்லை. எல்லா இந்து ஜாதியினரிடமும், வடமேற்கு எல்லை மாகாணத்தைத் தவிர மற்ற இடங்களில் முஸ்லிம்களிடமும் இந்த வழக்கம் சாதாரணமாக இருந்தது. வங்காளத்தில் 63 சதவீதம் இந்துப் பெண்களும், ஏறக்குறைய 52 சவவீதம் முஸ்லிம் பெண்களும் பதினைந்து வயதுக்கு முன்பே அதிலும் அநேகமாக, சிறு குழந்தைகளாக இருக்கும்போதே, கல்யாணம் செய்து கொடுக்கப்பட்டனர். இந்தியாவின் இதர இடங்களிலும் நிலைமை ஏறக்குறைய இதே போல்தான் இருந்தது. வடமேற்கு எல்லைப் புறத்திலும் சென்னை ராஜதானியிலும், தான் குழந்தை விவாகங்கள் குறைந்த அளவில் நடந்தன. இங்கு 75 சதவீதம் பெண்களுக்குப் பதினைந்து வயதுக்கு மேல் கல்யாணம் நடந்தது.

பல வருடங்களாகச் சீர்திருத்தவாதிகள் பெண்களின் பாதுகாப்புக்காக இவ்விஷயத்தில் புதிய, சக்தி வாய்ந்த சட்ட திட்டம் வேண்டுமென்று கேட்டுக் கொண்டிருந்தனர். கடைசியில், 1925ம் வருஷம், இந்திய அரசாங்கம் சம்மத வயது ஒரு பெண் நியாயமாகத் தன் கணவனுடன் மண வாழ்க்கை நடத்தச் சம்மதம் அளிக்கக் கூடிய வயது) கல்யாணமாகாத பெண்களுக்குப் பதினன்கு என்றும், மணமானவர்களுக்குப் பதின்மூன்று என்றும் நிச்சயித்தது. 1891ம் ஆண்டில் கொண்டுவரப்பட்ட சட்டத்தைப் போலவே இந்தச் சட்டமும் பயனற்றது என்பது சீக்கிரமே புலனுகி விட்டது. லட்சத்தில் ஒருவரேனும் இந்தச் சட்டத்தைப் பற்றி அறிவார்களா என்பதே சந்தேகம் என்றும், அறிந்தவர்களும் பின்விளைவுகளைப் பற்றிச் சிறிதும் கவலைப்படாமல், அதைப் புறக்கணித்து விடுவார்கள் என்றும்

மிகவும் ஏமாற்றமடைந்த சீர்திருத்தவாதிகள் கூறிக் கொண்டனர். வைதிகத்தையும், ஆசாரத்தையும் கெட்டியாகப் பிடித்துக் கொண்டிருப்பவர்களைப் பகைத்துக் கொள்ள அரசாங்கம் அஞ்சுவதாக வாதாடினார்கள்.

காந்திஜி 1926ம் ஆண்டு அக்டோபர் 7ம் தேதி 'யங் இந்தியா' பத்திரிகையில் ஒரு கட்டுரையில் பின்வருமாறு வினா எழுப்பினார்: ''குழந்தை மனைவிகளுக்கிடையிலும், குழந்தை விதவைகளுக்கிடையிலும் அவர்களுடைய நலனுக்காக ஓயாமல் உழைத்து ஆண்களையும் அவ்வாறே தொண்டாற்ற ஊக்குவித்து, குழந்தை விவாகமே இந்நாட்டில் இல்லாமல் செய்து விடக்கூடிய வீரப் பெண்மணிகள் எங்கே இருக்கிறார்கள்?''

ஏற்கனவே அந்த வேலையில் அவர்கள் தீவிரமாக முனைந்திருந்தார்கள் என்பது தான் அதற்குப் பதில்.

சுப்புலக்ஷ்மியின் தலைமுறையைச் சேர்ந்த சில பெண்மணிகள், உத்தியோகம் பார்க்கும் நோக்கத்தில் கல்வி கற்று இப்போது நன்கு தேர்ந்த அநுபவசாலிகளாகவும், இளமையும் ஆரோக்கியமும் உள்ளவர்களாகவும் இருந்தனர். அவர்களில் பெரும்பான்மையோர் பொதுக் காரியங்களில் ஊக்கம் கொண்டிருந்தனர். முன்னேற்ற மனப்பான்மையுடைய ஆண்களின் உதவியிலும், ஆதரவிலும் முழுமையான பிரஜா உரிமைகளைப் பெறுவதில் வெற்றி கண்டு கொண்டிருந்தார்கள்.

1926ம் ஆண்டு வங்கத்தின் பொதுக் கல்வி முதல்வரான ஒரு பிரிட்டிஷ் அதிகாரி பெண் குலத்துக்கு ஒரு சவால் விடுத்தார்: ''நீங்கள் அரசியலில் உங்கள் உரிமையை நிலை நாட்டி விட்டீர்கள். இன்னும் பள்ளிக்கூடப் படிப்பிலும், மேல் படிப்பிலும் உங்கள் உரிமைகளை எப்பொழுது நிலைநாட்டப் போகிறீர்கள்? இன்னும் எத்தனை நாட்கள் தாம் ஆடவன் வகுத்த கல்வித் திட்டம், அவனால் உருவாக்கப்பட்ட பரீட்சை முறை, கல்வித் துறை நிர்வாகத்தில் பெண்களுக்கு இடமே அளிக்காத ஆடவனது ஆதிக்க அதிகாரம் எல்லாவற்றையும் பொறுத்துக் கொண்டு இருக்கப் போகிறீர்கள்? பெண் கல்வியின் எதிர்காலம் எத்தகையதாக இருக்க வேண்டும் என்று நிர்ணயிப்பதில் எங்களுக்கு உதவி செய்யக் கூடியவர் பெண்களே. அவர்களே தாம் தங்களுக்கு என்ன வேண்டும் என்பதைப் பற்றிக் கூறியும் கேட்டும் பெற முடியும். அவை கிடைக்கும்வரை எங்களிடம் கேட்டுக் கொண்டே இருக்கவும் வேண்டும்.''

இந்திய மாதர் சங்கத்தின் தலைவியரிடமிருந்து இதற்கு உடனே பதில் கிடைத்தது. பெண் கல்வியின் வளர்ச்சிக்காக விரிவான ஒரு திட்டத்தை உருவாக்குவதற்கு நாட்டின் எல்லாப் பகுதிகளிலிருந்தும் பிரதிநிதிகளைக் கொண்ட ஒரு கூட்டம் போடுவதாக அவர்கள் அறிவித்தார்கள். பிரதிநிதிகளின் எண்ணிக்கை சுமார் ஐம்பதாக இருக்கலாம். அனைவரும் கல்வி, வைத்தியம் அல்லது சமூகசேவைகளில் நிபுணர்களாக இருக்கவேண்டும்.

இந்தக் கூட்டத்துக்கு வரும் பிரதிநிதிகள் ஒவ்வொருவரும் பிராந்தியச் சங்கங்களிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட வேண்டும் என்றும், அந்தந்தப் பிராந்தியங்களிலுள்ள வீட்டுப் பெண்மணிகள், தாய்மார்கள் தங்கள் அபிப்பிராயங்களை இந்நிபுணர்களிடம் சமர்ப்பிக்க வேண்டும் என்றும் நிச்சயித்தார்கள். இது அரசியல் ரீதியான கூட்டம் அல்ல என்று அரசினர் உணரும் வகையில் இதற்கு வைகவுண்டஸ் கோஷனும் (Viscountess Goschen) இதர பல ஆங்கிலேய மாதர்களும் ஆதரவளித்தனர். இந்தக் கூட்டம் பூனாவில் நடக்கும் என்று தீர்மானமாயிற்று. அங்கு விதவைகள் இல்லம் ஒன்றைத் தொடங்கியது மட்டுமல்லாமல் ஒரு விதவையை மணந்தும் முற்போக்கு மனப்பான்மையைக் காட்டிய டாக்டர் டி. டி. கார்வே இப்போது பெண்களுக்கான சர்வ கலாசாலை ஒன்றையும் நிறுவிக்கொண்டிருந்தார். பரோடா சமஸ்தானம் அப்போதே பெண்கள் கல்வியில் மிகவும் முன்னேற்றம் கண்டிருந்தது. இந்த சமஸ்தானத்தின் மகாராணி கெய்க்வாட் பூனா மகாநாட்டுக்குத் தலைமை வகிப்பதாக முடிவாயிற்று.

இந்தச் சூழ்நிலையில் சென்னை ராஜதானியில் பொதுஜன அபிப்பிராயத்தைத் திரட்டவும், உருவாக்கவும் சிறு சிறு கூட்டங்களுக்கு ஏற்பாடு செய்யும்படி சகோதரி சுப்புலக்ஷ்மியைக் கேட்டுக் கொண்டார்கள்.

1926ம் ஆண்டு கோடை விடுமுறையில் சென்னை நகரத்திலும், சுற்றுப்புறக் கிராமங்களிலும் பெண்கள் கூட்டங்களில் அவள் பேசினாள். கோயமுத்தூரில் ஒரு மகாநாட்டுக்குத் தலைமை தாங்கினாள். சொற்பொழிவுகளைக் கேட்க வந்த பெண்களில் பெரும்பான்மையோர் இதற்கு முன் எந்த விதமான பொதுக் கூட்டங்களையும் கண்டவர்களல்லர். சகோதரி சுப்புலக்ஷ்மி என்ற பெயரை அவர்களில் முக்கால்வாசிப் பேர் கேள்விப்பட்டிருந்தார்கள். அவளை நேரில் பார்க்கவே அவர்கள் முக்கியமாக வந்து கூடினார்கள்.

சகோதரி ரொம்பவும் பிரபலமாகிவிட்டிருந்தபோதிலும் எந்த விதமான ஆடம்பரமும் இன்றித் தங்களைப் போலவே சாதாரணமாக, அடக்கமாக, குடும்பப் பாங்காக இருப்பதைக் கண்டு பெரும்பாலோர் ஆச்சரியம் அடைந்தனர். அவள் பேசியபோது அனைவரும் சிரத்தையோடு கேட்டனர்; கேட்டதை ஆமோதிக்கவும் செய்தனர். குழந்தை விவாகத்தை ஒழித்தோமானால்தான் நமக்கு விமோசனம். வயது வரும்வரை பெண்கள் கல்யாணமாகாது இருந்தாலொழிய, பெண் கல்விக்காக பாடுபடுவது பொருளற்றது. எந்த ஒரு பெண்ணும் பதினெட்டு வயதுக்கு முன் மணம் செய்து கொள்ளக் கூடாது என்று சகோதரி திடமாக நம்பினாள்.

பெண் கல்விச் சீர்திருத்தத்துக்காகக் கூட்டப்படும் எந்த ஒரு மகாநாடும் குழந்தை விவாகத்தைப் பற்றி ஆலோசிக்காவிட்டால் உபயோகமில்லை என்பதை எல்லோரும் தெரிந்து கொண்டார்கள். ஆகையால், நாட்

டில் பல்வேறு பாகங்களில் நடந்த இருபத்திரண்டு பிராந்திய மகாநாடுகள் ஒவ்வொன்றிலும் இந்த விஷயம் விவாதத்துக்கு எடுத்துக்கொள்ளப்பட்டது. அக்டோபர் மாத நடுவில் நடந்த சென்னை மகாநாட்டில் தலைமை வகித்த சகோதரி சுப்புலக்ஷ்மி, ஜனவரியில் பூனாவுக்குச் செல்லும் பிரதிநிதிகளில் ஒருத்தியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டாள்.

அவளும், அவளுடைய கடைசி இரண்டு தங்கைகள், சொர்ணமும், நித்யாவும், ஒன்றாகப் பூனாவுக்குச் செல்வதென்றும், மகாநாடு ஆரம்பிப்பதற்குச் சில நாட்கள் முன்னதாகவே விடுமுறை எடுத்துக் கொண்டு அந்த நாட்களை பம்பாயில் கழிப்பதென்றும் தீர்மானமாயிற்று. சொர்ணம், ராணி மேரிக் கல்லூரியில் மாணவிகளுக்கு ரசாயனம் கற்பித்து வந்தாள். சென்னை சட்டக் கல்லூரியில் சேர்ந்த நித்யா, பிறகு அது தனக்கு ஏற்ற தொழில் அல்ல என்று தெளிந்து, சமீபத்தில் தான் பி. டி. ஸ்கூலில் கணக்கு ஆசிரியையாகச் சேர்ந்திருந்தாள்.

பூனா மகாநாட்டுக்குத் தேசத்தின் பல்வேறு பகுதிகளிலிருந்தும் சென்ற பிரதிநிதிகளின் எண்ணிக்கை அதிகமில்லையென்றாலும் அங்கே மகாநாட்டையொட்டி நடந்த பொதுக் கூட்டங்களில் கலந்துகொள்ள வந்த பெண்மணிகள் சுமார் இரண்டாயிரத்துக்கும் மேல் இருந்தனர். இந்தியப் பெண்மணிகள் நடத்தும் முதல் தேசிய மகாநாடானதால் வரலாற்றிலே ஒரு முக்கிய இடம் பெறத் தக்க சம்பவம் இது என்பதை அனைவரும் உணர்ந்திருந்தார்கள். எல்லாப் பிரதிநிதிகளும் கூடிப் பிராந்திய மகாநாடுகளிலிருந்து வந்த திட்டங்களை ஆராய்ந்து ஒன்று சேர்க்கும் பணியில் ஈடுபட்டபோது, பள்ளிகளில் பக்தி மார்க்கம் கற்றுக் கொடுக்கப்பட வேண்டும் என்ற தன்னுடைய திட்டத்துக்குக் கடுமையான எதிர்ப்பு இருப்பதைக் கண்டு சகோதரி வியப்படைந்தாள்.

''மதக் கொள்கைகளைப் போதிப்பதும், ஒழுக்க நெறியைப் போதிப்பதும் ஒன்றே தான். ஒவ்வொருவர் உள்ளத்திலும் சதா நல்




## இராசேந்திரன் கவிதைகள்

'இலக்கியம் இயம்புவது இலக்கியம்' என்பர். குறிக்கோளற்ற படைப்புகள் இன்றில்லாவிடினும் நாளைக்குக் குப்பைக் கூடையைப் புகலடையும். சமுதாயத்தை விழிப்புறச் செய்பவையே சாகா வரம் பெற்ற இலக்கியங்களாக முடியும். அந்த வகையில் அழுத்தமும் மிடுக்கும் செறிந்த கருவி கவிதை. அதுவும் எளிய தமிழில் ஓசை நயத்தோடு கருத்துக் கருவூலமாக இயற்றப்பட்டிருந்தால் அதன் ஆற்றலுக்குக் கேட்கவா வேண்டும்? எனவே, கவிஞர் திரு இராசேந்திரனின் கவிதைத் தொகுப்பில் சில கவிதைத் துளிகள் நம் நெஞ்சில் நிலையான இடம்பெறுவதில் வியப்பில்லை

கட்டுதற்குத் துணியில்லை; பிறந்தமேனிக்
கலைக் காட்சிப் பொருளாகக் கருதும் எங்கள்
மொட்டுகளைப் பாருங்கள்; இந்த வாழ்க்கை
முறைதானோ கூறுங்கள்! இரக்கம் இல்லார்
வெட்டுகின்ற பலியாடா? இல்லை நீங்கள்
விட்டெறிந்த தமிழ் ஏடா நாங்கள்?
செந்தேன்
கொட்டுவதை ஒருவாறு பொறுக்கக் கூடும்
கொடும் பசியை எவ்வாறு பொறுக்கக்
கூடும்?

என்று ஏழை மக்களின் துயரைப் படம் பிடித்துக் காட்டும் பொழுதும் சரி,

சனியே! போ! எங்கேனும் கெட்டுப் போ! போ!
சமுதாயமே! அறிவில் முட்டத் தக்க
எவ்விதத் தருமமாயும் பட்டுப் போ! போ!
எனக்கென்ன எங்கேனும் கெட்டுப் போ! போ!

என்று இன்றைய சமுதாயத்தைக் கடியும் பொழுதும் சரி, கவிஞர் தம் புலமையை நன்கு பயன்படுத்தியுள்ளார்; தவிர தாம் மறுமலர்ச்சி இலக்கியப் படைப்பாளர் என்பதையும் நிருபித்துள்ளார்.

அடுத்தவனிடத்தில் இயம்பாதே
இருக்கும் வீட்டில் இரும்புக் கதவை
அமைத்தது மாற்றி அறிவுக் கூர்மையால்
காத்த பூட்டைக் கண்டுபிடித்ததும்
எந்தநாள் நானோ அந்த
நாள் முதல் மனிதன் நாணயம் மடிந்ததே!

என்பது ஓர் அற்புதமான கவிதை.

நூலில் இன்சுவைக்கும் பஞ்சமில்லை. மணநாளை எதிர்நோக்கும் காதலி,

தணற்பருவ ஆசைக்குத் தலையசைத்தே
தாலியை முடியவில்லை; துணிச்சல் இல்லை!

என்று ஏங்குவதும்,

புகைபிடித்த ஓவியம்போல் ஆனேன்; காதல்
புதிர்பிடித்த என்னைப் பிடிக்கவில்லையா சொல்?

என்று காதலன் கேட்பதும் நன்கு அமைந்துள்ளன.

''வெள்ளத்தின் பெருக்கைப் போல் கலைப் பெருக்கும் கவிப்பெருக்கும் மேவுமாயின் பள்ளத்தில் வீழ்ந்திருக்கும் குருடரெலாம் விழி பெற்றுப் பதவி கொள்வார்'' என்ற மகா கவிஞன் பாரதியாரின் வரிகளை நமக்கு இந்தக் கவிதைகள் நினைவூட்டுகின்றன. இவற்றில் பல ஏற்றம் மிகுந்தவை; ஏற்றமளிக்கும் ஏற்றவை.

— எஸ். சுந்தரம்

ஆசிரியர்: இராசேந்திரன்.
தொகுத்தவர்: எம். பி. ஸ்ரீனிவாசன்
பிரசுரம்: தோழமை நிலையம், சிவகங்கை.

லெண்ணங்கள், நற்செய்கைகள் மூலம் ஏதோ ஒன்றை அடைய வேண்டிப் போராட்டம் நடந்த வண்ணம் இருக்கிறது. இந்த உயர்ந்த நிலையை அல்லது கடவுளை அடைவதுதான் கல்வியின் முக்கிய நோக்கம். மனிதனுடைய சுபாவத்தில் ஒரு பகுதி, அவனை எப்போதும் கீழே இழுத்துக் கேவலம் நீசமான விஷயங்களில் அவனைக் கட்டிப் போடப் பார்க்கிறது. ஒவ்வொருவருக்கும் இந்தப் பந்தங்களிலிருந்து தன்னை விடுவித்துக் கொள்வதுதான் முக்கிய நோக்கமாக இருக்க வேண்டும். அப்பொழுது அவர்கள் பரந்த நோக்குடன் விளங்கலாம்'' என்று கப்புலக்ஷ்மி கூறினாள். குழந்தைகளிடம் ஏதும் வலுக்கட்டாயமாகப் புகுத்தக் கூடாது. பெண்களும், பையன்களும் தங்களைத் தாங்களே உயர்த்திக் கொள்ள உதவி புரியக்கூடிய வகையில் மத, ஒழுக்கப் போதனைகள் அமைந்திருக்க வேண்டும்.''

சகோதரியின் திட்டத்தை எதிர்த்து ஐந்து பிரதிநிதிகள் பேசினார்கள். ஆனால் அத் தீர்மானம் ஓட்டுக்கு விடப்பட்டபோது நான்கே பேர்கள்தான் அதற்கு எதிராக வோட்டுச் செய்தார்கள். பெரும்பான்மையான வோட்டுக்கள் கிடைக்கப் பெற்று அது அங்கீகரிக்கப் பட்டது.

எல்லாப் பிரதிநிதிகளும் ஏகமனதாக ஒப்புக்கொள்ளாத தீர்மானம் இன்னொன்றும் இருந்தது. அத்தீர்மானம் எல்லா உயர்நிலைப் பள்ளிகளிலும் ஆங்கிலம் கட்டாயமாக இரண்டாவது மொழியாகக் கற்றுக் கொடுக்கப் படவேண்டும் என்று வற்புறுத்தியது. தீர்மானம் வோட்டுக்கு விடப்பட்டபோது, இந்திக்கு ஆதரவாகப் பதினைந்து ஓட்டுக்களும் ஆங்கிலத்துக்கு ஆதரவாக இருபத்தியோரு ஓட்டுக்களும் கிடைத்தன.

மற்றப் பெரிய விஷயங்களிலெல்லாம் பிரதிநிதிகள் அனைவரும் ஏகமனதாக இருந்தனர். டில்லி சட்டசபை அங்கத்தினர் சர் ஹரிசிங் கவுர் (Sir Hari Singh Gour) என்பவர் பெண்களின் சம்மத வயதைப் பதினாறாக உயர்த்துவதற்கு மசோதா ஒன்று கொண்டு வர இருந்தார். இதற்கு ஆதரவு திரட்ட இந்திய மாதர் சங்கம் நாடு முழுவதும் பிரசாரம் செய்ய வேண்டுமென்று தீர்மானமாயிற்று. அத்துடன் எந்தப் பெண்ணும் பதினெட்டு வயதுக்கு முன் கல்யாணம் செய்து கொள்ளக் கூடாது என்று சட்டம் இயற்றுமாறு அரசாங்கத்தை வற்புறுத்த வேண்டும் என்றும் பிரதிநிதிகள் ஏகமனதாக ஒப்புக் கொண்டார்கள்.

பிறகு அவர்கள், பெண் கல்வியில் ஆரம்பப் பள்ளியிலிருந்து, கல்லூரிப் படிப்பு முடிய ஒவ்வொரு நிலையிலும் என்னென்ன சீர்திருத்தங்களைக் காண விரும்பினார்களோ அவைகளை ஒழுங்கு செய்ய அமர்ந்தனர். அவர்கள் சிபாரிசு செய்தவை, பெற்றோர்களின் விருப்பத்தையும், மகாநாட்டுப் பிரதிநிதிகளில் பலர் ஆசிரியைகளாக இருந்து பெற்ற அநுபவத்தினையும் ஆதாரமாகக் கொண்டவை. பரந்த மனப்பான்மையுடன் கூறப்பட்ட நுணிகரமான யோசனைகளாக இருந்தன. தாங்கள் விரும்பியதை யெல்லாம் பெறுவதற்கு வெகு காலம் பிடிக்கும்; தங்கள் வாழ்நாட்களுக்குள் இச் சீர்திருத்தங்கள் நிறைவேறிக் காண்பது அரிது என்பதை அவர்கள் உணர்ந்திருந்தார்கள். ஆயினும் இந்த எண்ணத்தால் அவர்கள் மனம் தளர்ந்து விடவில்லை. தாங்கள் வகுத்து விட்ட திட்டத்தை நிறைவேற்றத் தங்களால் முடிந்ததை யெல்லாம் செய்யச் சித்தமாக இருந்தார்கள்.

## 7

''பூனாவில் தங்கியிருந்த நாட்களை மிகவும் ரசித்தோம்'' என்று கப்புலக்ஷ்மி சென்னைக்குத் திரும்பியதும் தன் நாட் குறிப்புப் புத்தகத்தில் எழுதினாள்.

எழுதிய மசி கூட உலரவில்லை. அதிகார பூர்வமான எச்சரிக்கை ஒன்று வந்துவிட்டது! இதுபோல் இந்திய மாதர் சங்கத்தின் நடவடிக்கைகளில் அவள் இனியும் பங்கெடுத்துக் கொண்டால், ஐஸ் ஹவுஸ் விடுதியின் மேற்பார்வையாளர் பதவியையும், லேடி வெல்லிங்டன் பயிற்சிக் கல்லூரியின் தலைமை ஆசிரியைப் பதவியையும் அவள் ராஜிநாமாச் செய்ய வேண்டியிருக்கும் என்பதுதான் அந்த எச்சரிக்கை.

அவளுக்கு எதிரிகளாகி விடுவது என்று கங்கணம் கட்டிக் கொண்டிருக்கும் ஜஸ்டிஸ் கட்சியைச் சேர்ந்த சிலரது தூண்டுதலின் பேரிலேயே இந்தப் பயமுறுத்தல் வந்திருக்கிறது என்று அவள் உறுதியாக நம்பினாள். தன் பராமரிப்பின் கீழுள்ள பிராமணரல்லாத பெண்களிடமும் தான் நியாயமாகவே நடந்து கொள்வதை இந்த மனிதர்கள் பிடிவாதமாக நம்ப மறுக்கிறார்கள் போலும்!

இந்தக் குற்றச்சாட்டு ஆதாரமற்றது என்பது அவளுக்கும் அவளுடன் வேலை செய்தவர்களுக்கும் நன்கு தெரியும். ஆரம்பப் பள்ளி ஆசிரியைகளாக விளங்க அவளிடம் பயிற்சி பெற்று வரும் பெண்களில் பாதிப் பேர்களுக்கு மேல் பிராமணரல்லாதவர்கள்தான்.

(தொடரும்)

## ஸ்ரீஹரி சுற்றுப் பயணம்

ஸ்ரீஹரி அவர்கள் நாளது 4-5-66 சென்னையிலிருந்து புறப்பட்டுக் காசிக்கு 6-5-66 போய்ச் சேருகிறார். காசி சர்வ கலாசாலை விருந்தினர் விடுதியில் தங்குவார். 9-5-66 அங்கிருந்து புறப்பட்டு 11-5-66 சென்னை சேருவார்.

எங்கள் தாத்தாவுக்குத் தாத்தா வுக்குத் தாத்தா கட்டின வீட்டை விட்டு விட்டு நாங்கள் புது இடத் தில் கட்டின புது வீட்டுக்குப் போக வேண்டுமென்று என்றைக்கு எண்ணினோமோ அன்றிலிருந்து பிடித்தது சனியன்.

பழைய வீட்டை வாடகைக்கு விடவும் எங்கள் தகப்பனார் ஏற் பாடு செய்து கொண்டிருந்தார். இன்னும் பத்துத் தினங்களில் பழைய வீட்டிலிருந்து சாமான்களை யெல்லாம் காலி செய்து புது வீட் டுக்குக் கொண்டு போய்விட வேண் டும் என்று தெரிந்ததும் நாங்கள் பட்ட பாடு.... அப்பப்பா.....நாய் கூடப் படாது!

தாத்தாவுக்குத் தாத்தாவுக்குத் தாத்தா கட்டிய வீட்டில் அவ ருடைய தாத்தாவுக்குத் தாத்தா காலத்துப் பொருள்கள் கூட இருந் தன. பொருள்கள்.... கண்காட்சி வைத்தால் எங்கள் வீட்டுச் சாமான்கள்தான் அதில் முதல் இடம் பெறும் என்பது நிச்சயம்.

''சேச்சே......! அவ்வப்போது வேண்டாத சாமான்களை அப்புறப் படுத்தாதன் விளைவு இப்போது இந்தக் கஷ்டம்'' என்று அம்மா நொந்து கொண்டாள்.

''அப்புறப்படுத்தாதது யார் குற்றம்...? தாத்தா... என்னுத்






தாத்தா... கொள்ளுத் தாத்தா...உளுந்துத் தாத்தா... துவரைத் தாத்தா இவர்கள் குற்றம். இப்பொழுது எல்லாம் இந்தப் பேரன் தலையில் விழுந்திருக்கிறது'' என்று வீட்டுக்கு மூத்த பிள்ளையாகிய நான் அலுத்துக் கொண்டேன்.

முதலில் ஹைதரலி காலத்துப் பரணில் ஏறி, எல்லாச் சாமான்களையும் கீழே இறக்க வேண்டும். புராதன வீடாகையால் கீழே எவ்வளவு இடம் உண்டோ அவ்வளவு இடம் பரணிலும் உண்டு. அது நிரம்பச் சாமான்கள் அடைத்து வைக்கப்பட்டிருந்தது. என்ன சாமான்கள் என்றால் பரம்பரைத் தாத்தாக்கள், பாட்டிகள் அவ்வப்போது வேண்டாமென்று கருதிய ஓட்டை உடைசல்கள்.

வீடு மாற்றுவதற்கு முதல் படி பரண்மேல் ஏறி எல்லாச் சாமான்களையும் இறக்கி, வேண்டும் என்பவைகளை வைத்துக் கொண்டு வேண்டாத சாமான்களை விற்றுவிடுவது என்று தீர்மானம் ஆனதும், யார் துணிந்து பரண் மேல் ஏறுவது என்ற பிரச்னை ஏற்பட்டது.

நாங்கள் வீட்டை மாற்றத் தீர்மானம் செய்து விட்டது தெரிந்தால் மேலே பரண் மேல் இருக்கும் பரம்பரைச் சொந்தக்கார எலிப் படைகள் ஆட்சேபம் தெரிவிக்கக்கூடும் என்ற எண்ணத்தில் நான் மெதுவாகத் தலை வலி என்று காரணம் காட்டி ஒதுங்கினேன்.

என் மைனர் தம்பிகள் இருவரும் காலரை மடித்து விட்டுக் கொண்டு அதற்கும் தங்களுக்கும் துளியும் ஒத்து வராது என்று நாசூக்காக வெளியேறி விட்டனர்.

''அம்மா நீ கவலைப்படாதே... நாங்கள் இருக்கிறோம்'' என்று என் இரு தங்கைகள் விசாலாட்சியும், விமலியும் ஏணியைத் தூக்கிக் கொண்டு வந்து போட்டு, ஜான்ஸி ராணிகள் மாதிரி புடவையை வரிந்து கட்டிக் கொண்டு மேலே ஏறி விட்டனர். அவர்களுக்குப் பின்னால் 'நானும் ஏறுவேன்...நானும் ஏறுவேன்' என்று அடம் பிடித்த என் சிறிய தம்பிகள் இருவரையும், பெரிய அக்கா பெண்கள் இருவரையும் நான் ஓசைப்படாமல் மேலே ஏற்றி விட்டு விட்டு வந்து விட்டேன். சிறிது நேரம் கீழே நிம்மதியாக இருக்கலாம் என்று எண்ணிய என் தலையில் இடி விழுந்தது. அதாவது மேலே இருந்து என் அருமை மருமான் ஒரு பழைய டப்பாவைத் தூக்கிக் குறி பார்க்காமல் எறிய, அது எப்படியோ ராக்கெட்போல் என் தலையே குறியாக வந்து விழுந்தது.

சில நிமிடங்களில் வெண்கலக் கடையில் யானை புகுந்தது என்று சொல்லுவதன் அர்த்தம் எனக்கு நன்றாகப் புரிந்தது. ஒரே 'கட புடா' சத்தம் காதைத் துளைத்தது. குட்டிகள் அங்கிருந்த அற்ப வெளிச்சத்தில் ஓடி விளையாட ஆரம்பித்து விட்டனர் என்று தெரிந்தது. விசாலியும், விமலியும் தங்கள் சஹஸ்ரநாம அர்ச்சனையைத் தொடங்கவும் குட்டி ஸ்வாமிகள் ஒருவாறாகத் தங்கள் ஓடிப் பிடிக்கும் விளையாட்டை நிறுத்தின.

திடீரென்று விமலியின் கீச்சுக் குரல் செவியைத் துளைத்தது. 'விருச்சி... விருச்சி...' என்று அவள் அலறிய அலறலில் நான் அம்மா, பாட்டி, வேலைக்காரி எல்லோரும் ஓடி வந்து மேலே அண்ணாந்து பார்த்து, ''என்னடி விமலி... விசாலிதான் மேலே இருக்கிறாளே'' என்று குரல் கொடுத்தோம்.



இனியுடன் மேலே இருந்து விமலியின் தலை பூச்சிக் கூடு அலங்காரத்துடன் எட்டிப் பார்த்தது. ''விசாலி இல்லே...விருச்சிகம்...விருச்சிகம்'' என்று அவள் கூச்சல் போடவும் எங்களுக்கு முதலில் ஒன்றும் புரியவில்லை.

அதற்குள் ''இதோ தேளை அடிச்சாச்சு... இக்கினியூண்டு தேள்... அதற்கு இவ்வளவு கலாட்டா செய்துவிட்டாள் இவள்'' என்று விசாலி கூறிக் கொண்டே மேலே இருந்து ஒரு துடைப்பத்தை நீட்டினாள்.

நாங்கள் எல்லோரும் உடனே ஒருவர்க் கொருவராகப் பறந்தோம்! செத்த தேளை மேலே போட்டுவிடுவாளோ என்ற பயத்தினால் அல்ல. எங்கே வெண்சாமரத்தை வீசி விடுவாளோ என்றுதான்.

மேலே இருந்த தூசி தும்புடன் சாமான்களெல்லாம் வீடு நிறைய நிறைந்துவிடவே அம்மா மலைத்து நின்று விட்டாள்.

''அம்மம்மா! நிறையப் பொம்மை இருக்கு!'' என் அக்கா பெண் குரல் கொடுத்தாள். அடுத்த அரை மணி நேரத்துக்குப் பேசவே இல்லை.

''சரி... எல்லோரும் இறங்கிக் குளித்துச் சாப்பிட்டுவிட்டு, மறுபடியும் சாமான்களை இறக்குவீர்களாம்'' என்று அம்மா குரல் கொடுத்தபோது மேலே இருந்து எதிர்க் குரல் வராததுடன், ஒரே நிசப்தமாக இருக்கவும் ஒரு நிமிடம் நானே நடுநடுங்கி விட்டேன்.

அதற்குள் பாட்டி அங்கலாய்க்க ஆரம்பித்துவிட்டாள். ''என்னடியம்மா...மேலே பாம்பு கீம்பு இருந்து... குழந்தைகளைக் கடிச்சுட்டுதா... அதுக்குத்தான் அப்பொழுதே பெண் குழந்தைகள் ஏணிமேல் ஏறக் கூடாது என்று சொன்னது'' என்று கூறிக்கொண்டே ''என்னடி, பிடாரிகளா, சனியன்களா... இறங்குங்கடி...'' என்று கத்திக் கொண்டே தனது நாமாவளியை அடுக்கிக்கொண்டே போனாள்.

ஒவ்வொருவர் பெயராக உரக்கக் கத்தியும் மறுமொழி வராமல் போகவே நான் பீதியுடன் ஏணிமேல் ஏறிப் பரணை எட்டிப்பார்த்தேன். பரணின் மறுகோடியில் என் அக்கா பெண்கள் அழகாகப் பொம்மைக் கொலு வைத்துக் கொண்டு உட்கார்ந்திருந்தனர். என் குட்டித் தம்பிகள் இருவரும் ஒரு பழைய சீட்டுக் கட்டைத் தேடி எடுத்துச் சுவாரஸ்யமாகச் சீட்டு விளையாடிக் கொண்டிருந்தனர். புத்தகப் பைத்தியமான விமலி ஒரு பழைய புத்தகப் பெட்டியைத் திறந்து வைத்துக் கொண்டு, கண்களை இடுக்கிக் கொண்டு கூரையிலிருந்து வந்த வெளிச்சத்தில் படிப்பில் ஆழ்ந்து போயிருந்தாள்.

விசாலியின் கால்கள் மட்டும் தெரிந்தன. அவள் தன் உடலின் மறு பாதியை ஒரு பெரிய மரப் பெட்டிக்குள் மறைய விட்டுக் கொண்டு எதையோ சுவாரசியமாக ஆராய்ந்து கொண்டிருந்தாள்.

இதற்குள் கீழே இருந்து எங்கள் மாமாவின் குரல் கேட்கவே எல்லோரும் வாரிச் சுருட்டிக் கொண்டு எழுந்தனர்.

எங்கள் திருவாளர் மாமாவைப் பற்றி ஒரு சிறு வார்த்தை. அம்மாவுக்குத் தம்பியான அவர் இல்லாமல் ஒரு காரியம் வீட்டில் நடைபெறாது. மிகவும் கண்டிப்பானவர். மாமா ஊருக்கு உபகாரியோ என்னவோ ஆனால் வீட்டுக்கு உபகாரி. ஆனால் அவர் செய்யும் உபகாரமெல்லாம் அபகாரமாக இருந்தாலும் யாரும் வாயைத் திறக்கக்கூடாது.

''ஸார்...! வரச் சொன்னீங்களே...!'' என்று வீதியில் குரல் கேட்கவும் நான் எட்டிப் பார்த்தேன். பழைய பேப்பர் புத்தகக்காரன் நின்றிருந்தான். அவசியமான புத்தகங்கள் தவிர மற்ற எல்லாக் காகிதக் குப்பையும் வீட்டை விட்டுப் போய்விட வேண்டும் என்று மாமா கூச்சலிட, அவரவர் தங்கள் பாடப் புத்தகங்களை எடுத்துப் பத்திரப்படுத்திக்கொண்டு வேண்டாத புத்தகங்களை அவர் முன் கொண்டு போய் மலை போல் குவித்தனர். இரண்டு மணி நேர மல்லுக்குப் பிறகு நான்கு பீரோ பழைய புத்தகங்களும் இரண்டு பேப்பர் கத்தைகளும் விலைக்குப் போட்டுக் கையில் ஐம்பது ரூபாய் பெற்றுக் கொண்டு மாமா எங்களைக் கம்பீரமாகப் பார்த்தார்.

பேப்பர்க்காரன் எல்லாவற்றையும் வாரிச் சுருட்டிக் கொண்டு போனதும், பழைய சாமான்காரன் வந்து சேர்ந்தான்.

மாமா அம்மாவிடம் வந்து ரகசியக் குரலில், ''அக்கா! நீ சும்மா இரு... நான் எல்லாவற்றையும் பேசி முடித்துவிடுகிறேன்'' என்று கம்பீரமாகச் சொன்னவர், ''ஆமாம், யார் யாருக்கு என்னென்ன பொருள் வேண்டுமோ எடுத்து வைத்துக் கொள்ளுங்கள். பொருள் போனால் பிறகு திரும்பி வராது'' என்று குரல் கொடுக்கவும், அந்தக் குப்பைச் சாமான்களின் மேல் பாய்ந்து எல்லோரும் ஆராய ஆரம்பித்து விட்டனர்.

இவ்வளவு நாட்கள் வேண்டாத சாமான்களாக இருந்தவை அனைத்தும் நொடியில் வேண்டிய சாமான்களாக மாறிய மாயையை நான் என்னவென்று சொல்ல!

''பாட்டி! இதோ ஜபமாலை! உனக்கு வேண்டாம்?'' என்று விமலி கத்த, பாட்டியும் ''ஆமாண்டி, அதைக் கொண்டா!'' என்று தடுமாறி எழுந்து வந்தாள்.

''ஐயையோ! இதை யாருடா இப்படிப் போட்டா? எங்க தாத்தாவுடைய கைத்தடியாச்சே!'' என்று பாட்டி குப்பையிலிருந்து உடைந்த கைத்தடியை இழுத்தாள்.

''ஹைய்யா, விசாலி! பல்லாங்குழி இருக்குடி...'' என்று விமலி உடைசல் பல்லாங்குழியின் ஒரு பாகத்தைக் கையில் வைத்துக் கொண்டு மற்றொரு பாகத்தைத் தேடுவதில் முனைந்தாள்.

''இது எனக்குக் கல்யாணச் சீராக வந்தது. இதைப் போடக் கூடாது'' என்று சொல்லி ஒவ்வொன்றாக எடுத்து அம்மா ஒரு மரப் பெட்டி நிறையப் பாத்திரங்களும் பண்டங்களுமாக வாரி நிரப்பிக் கொண்டாள்.

குட்டிகள் அவருக்குக் கொஞ்சம் சாமான்களை வாரி ஒதுக்கிக் கொண்டனர். கடைசியில் மீதி இருந்தவை, குப்பை கூளங்களும் ஓட்டை டின்களும், பிய்ந்த கூடைகளும்தான்.

''இந்தப் பழைய சாமான்கள் ஒன்றும் அந்தப் புது வீட்டுக்கு வரக் கூடாது'' என்று

நான் பொறுமை இழந்து கத்தவே, பாட்டி தன் பல்லுக்கு இரண்டு உடைந்த கற்சட்டிகளைக் குறைத்துக் கொண்டாள். குட்டிகள் தன் சோழிக் கூடையிலிருந்து வேண்டா வெறுப்பாக இரண்டு சோழிகளைத் தியாகம் செய்தார்கள். மற்றப்படி எல்லாச் சாமான்களும் குறைவற அப்படியே நின்றன.

சுவரிலிருந்து அகற்றி எடுத்த நூற்றைம்பது பழைய படங்கள், போட்டோக்களின் கண்ணாடிகளைப் பிரேமுடன் ஓர் ஆளிடம் கொடுத்து மாமா ஏழு ரூபாய் பெற்றுக் கொண்டபோது, அம்மா, "என்னடா சாம்பு! இப்பொழுது பிரேம் போடுவதென்றால் மூந்நூறு ரூபாய் வேண்டியிருக்கும். இந்த விலைக்குக் கொடுத்து விட்டாயே!" என்றதற்கு, "என்னக்கா இது. இனிமேல் யார் புதுப் பிரேம் போடப் போகிறார்கள்? எல்லாப் படங்களையும் தானம் செய்துவிடு" என்று சொல்லி அந்தப் பேச்சை அத்துடன் முடித்த பெருமை மாமாவையே சாரும்.

புது வீட்டுக்கு எடுத்துப் போக வேண்டிய சாமான்கள் லாரியில் ஏற்றுவதற்காகக் கட்டப்பட்டன. ஆபீஸ் வேலையாக வெளியூர் போயிருந்த எங்கள் தகப்பனார் அன்றுதான் ஊர் திரும்பினார்.

அன்று நல்ல நாளாக இருப்பதால் உள்ளூரிலேயே இருக்கும் அந்தப் புது வீட்டுக்குச் சாமான்களைக் கொண்டு போவது என்று ஏற்பாடு. சாமான்களைப் பார்த்துத் திகைத்து நின்ற அப்பா, பதில் ஏதும் பேசாமல் வெளியில் சென்றார்.

லாரி வரும் என்று காத்திருந்த வேளையில் நடந்த சம்பாஷணையைக் கேளுங்கள்.

"நான் படிக்கும் மேஜை இது. இதைக் கண்டிப்பாகக் கொண்டு போக வேண்டும்"— தம்பியின் குரல் இது.

"எது வந்தாலும் வராவிட்டாலும் என்னுடைய டிரஸ் பீரோ வர வேண்டும்" — விசாலி தன் பீரோவைத் தழுவிக்கொண்டு சொன்ன வார்த்தைகள்.

"அம்மா, அந்தப் புத்தகப் பீரோவை நான் புது வீட்டு டிராயிங் ரூமில்தான் வைப்பேன்." — இது விமலி.

"சின்னக் கல் குழம்புக்கு அரைப்பதற்கு. பெரிய கல் தோசை மாவு அரைக்க. இரண்டையும் லாரியில் தூக்கிப் போட வேண்டும்." அம்மாவின் அறிவிப்பு.

"பூஜை மண்டபத்தை மறந்துடாதேங்கோடி..." — இது பாட்டியின் பிரகடனம்.

லாரி வரும் என்று காத்திருந்த வேளையில் அப்பா மட்டும் பிரசன்ன வதனத்துடன் திரும்பி வந்தார். வந்தவர் அம்மாவைக் கூப்பிட்டு, "இந்தா வாடகை அட்வான்ஸ்... எடுத்துப் பீரோவில் வை" என்று கூறிச் சாய்வு நாற்காலியில் சாய்ந்து கொண்டார்.

"வீட்டைக் காலி செய்வதற்குள் வாடகைக்கு ஆள் பிடித்து அட்வான்ஸ் வாங்கி விட்டீர்களே" என்று அம்மா முகம் மலர்ந்து கூறினாள்.

"ஆமாம். புது வீட்டுக்கு அட்வான்ஸ் கொடுக்கத்தான் இழுவில் நிற்கிறீர்களே!" என்று அப்பா கூறவும், "என்னது, என்னது? புது வீட்டுக்கா?" என்ற கலவரத்துடன் எங்கள் குடும்பம் முழுதும் அப்பாவைச் சூழ்ந்து கொண்டது.

"ஆமாம். நமக்குப் புது வீடு ஒத்துக் கொண்டாலும் நம் சாமான்களுக்கு ஒத்துக் கொள்ளாது. நமக்கு இந்த வீடுதான் வாய்க்கு. புது வீட்டுக்குக் குடித்தனம் வைக்கத் தீர்மானித்து விட்டேன்" என்று புன்சிரிப்புடன் அப்பா தெரிவித்தார்... நாங்கள் யாரும் பேசவே யில்லை.

அடுத்த நாள் எங்கள் வீட்டுச் சாமான்கள் அவ்வளவும் வேண்டாத சாமான்களாக மாறித் திரும்பவும் தங்கள் யதாஸ்தானமான பரண்மேல் ஏறிக் கொண்டன.

## தூண்டில் முள்

### (சிங்காரத்தின் ஊகங்கள்)

1. வாயில் வெளியில் போய் நின்றிருந்தன வானின் சக்கரங்கள், காலைப் பனியினுல் ஈரமாகவிருந்த தரையில் பதிந்திருந்த இரண்டு தடங்களின் நடுவே ஓர் ஒற்றைத் தடம் இருப்பதைக் கண்டான் சிங்காரம். திருடன் தனது வானில் ஒரு மோட்டார் சைக்கிளைக் கொண்டு வந்திருக்க வேண்டும். வானை அங்கு நிறுத்திவிட்டு மோட்டார் சைக்கிளில் அவன் போயிருக்க வேண்டும். அதுவே அந்த ஒற்றைச் சக்கரத் தடம். வழியில் தன் காரைத் தாண்டி மோட்டார் சைக்கிளில் ஒருவர் சென்றது அவன் நினைவில் பளிச்சிடுகிறது. அவன் பின்னாலிருந்த மீன்பிடி தூண்டில் சாதனம் வேறு.
2. மோட்டார் சைக்கிளில் சென்ற நபரைக் கவனித்தபோது நினைவில் பதித்துக் கொண்ட அடையாளங்களி லிருந்தும், தூண்டில் பிடித்துள்ள மற்றவர்களி லிருந்து அவன் உடை தனித்திருந்ததி லிருந்தும், சிங்காரம் அவனைக் கண்டு பிடித்து விட்டான்.
3. தன் தூண்டிலில் மீன் சிக்கவில்லை என்று அவன் சாதித்தாலும் சிங்காரத்தின் கண்கள், அவன் தூண்டில், கனத்திருந்து வளைந்திருப்பதையும், மிதக்கும் தக்கை முழுகி இருப்பதையும் கண்டுவிடுகின்றன. தூண்டிலின் நுனியில் ஏதோ கனமான பொருள் இருக்கிறதென்பது உறுதியாகிறது. தான் கொள்ளையிட்ட பொருளை மறைக்கத் திருடன் கையாண்ட நூதன வழியைச் சிங்காரத்தின் ஊகிக்கும் திறமை வெற்றி கொண்டு விடுகிறது.

# பாலுஸேரி பெனிபிட் சிட்பண்ட் பிரைவேட் லிட்.

(நிறுவியது : 1947)

தலைமைக் காரியாலயம் &
ரிஜிஸ்டர்டு ஆபீஸ் :
பாலுஸேரி பில்டிங்
3, சிங்கராச்சாரி தெரு
சென்னை - 5

கிளைகள் :
புது டெல்லி-1, 3 & 5
பெங்களூர்-9
கல்கத்தா - 29
பம்பாய் -1 & 22

## ஏலச் சீட்டுகள் - 1966 மே ஸீரிஸ்

## பம்பாய் கிளைகள்

**கிங்ஸ் சர்க்கிள் கிளை**
வீணா விஹார்
(ஷண்முகானந்தா சபா அருகில்)
17-A, பிளாங் ரோடு, பம்பாய்-22 D. D.
போன் : 471455 - தந்தி : GROWRICH

ஏலத் தேதி : 8-5-66
சேரக் கடைசி தேதி : 7-5-66

| வகுப்பு | மாதச்சந்தா | மாதங்கள் | சீட்டுத் தொகை |
|---|---|---|---|
| **குறுகியகால சீட்டுகள்** | | | |
| A | 200/- | 25 | 5000/- |
| B | 100/- | 25 | 2500/- |
| C | 50/- | 25 | 1250/- |
| F | 25/- | 25 | 625/- |
| G | 20/- | 25 | 500/- |
| **நீண்டகால சீட்டுகள்** | | | |
| C | 200/- | 50 | 10000/- |
| A | 100/- | 50 | 5000/- |
| B | 50/- | 50 | 2500/- |
| D | 20/- | 50 | 1000/- |

**போர்ட் (Fort) கிளை**
சத்னம் மான்ஷன் முதல் மாடி
245, பி. டிமெல்லோ ரோடு
(G. P. O. அருகில்) பம்பாய் - 1 B. R.
தந்தி : EVERMANN

ஏலத் தேதி : 28-5-66
சேரக் கடைசி தேதி : 27-5-66

| வகுப்பு | மாதச்சந்தா | மாதங்கள் | சீட்டுத்தொகை |
|---|---|---|---|
| **குறுகியகால சீட்டுகள்** | | | |
| B | 100/- | 25 | 2500/- |
| C | 50/- | 25 | 1250/- |
| F | 25/- | 25 | 625/- |
| G | 20/- | 25 | 500/- |
| J | 10/- | 25 | 250/- |
| **நீண்டகால சீட்டுகள்** | | | |
| A | 100/- | 50 | 5000/- |
| B | 50/- | 50 | 2500/- |
| D | 20/- | 50 | 1000/- |

**கிங்ஸ் சர்க்கிள் கிளை :**
வேலை நேரம் : காலை 8 முதல் 10-30 மணி வரை : மாலை 4 முதல் இரவு 8 மணி வரை
வார விடுமுறை நாள் — வெள்ளி

**போர்ட் (Fort) கிளை :**
வேலை நேரம் : காலை 11 முதல் மாலை 6 மணி வரை
வார விடுமுறை நாள் — ஞாயிறு

விலாசம் தெளிவாக எழுதிக் கேட்பவர்களுக்கு எங்கள் விதிகள் இலவசமாக அனுப்பப்படும். சீட்டில் அங்கத்தினர்களைச் சேர்த்துக் கொள்ளும் உரிமை பண்டைச் சேர்ந்தது

**பாலுஸேரி மூலம் சேமிப்புகளைப் பெருக்கி பயனடையுங்கள்**

# மாரி

கோவி. மணிசேகரன்

சென்னையின் புகழ் மணக்கும் கூவம் நதி நிறைவாகவும், சலனமற்றும் ஓடிக் கொண்டிருந்தது. அப்போது புரட்டாசி மாதம்; பொன்னுருகக் காய்ந்து மண்ணுருகப் பொழியும் காலம் என்பார்கள். மண்ணுருக மழை பொழியா விட்டாலும், கூவம் நதிக்குப் போதுமான அளவுக்கு வானம் கருணை புரிந்திருந்தது. சென்னைக்கு அது போதும். எந்த விளைச்சல் சாவியாகிவிடப் போகிறது ?

மணி இன்னும் பத்தடிக்கவில்லை. நகராண்மைக் கழகப் பள்ளி மாணவர்கள் சாரி சாரியாகச் சென்று கொண்டிருந்தார்கள். ஒரே கூச்சல். சிலர் கோலிக் குண்டுடனும், சிலர் காகிதத்தில் ஆகாய விமானம் விட்டும், சிலர் அடித்தும் உருண்டும் ஏக அமர்க்களப் படுத்தியவாறு சென்றனர். பெயர் போன சிந்தாதிரிப்பேட்டைக் கடைத் தெருவில் தெத்திலிப் பொடிகளை வாங்கிக் கொண்டு திரும்பினாள் மாரியம்மாள். எடுத்துச் சென்ற எழுபது காசுகளைக் கடைவீதி துப்புரவாக விழுங்கி விட்டது. இன்னும் மேல் செலவுக்குக் காசுகள் தேவைப்பட்டன. என்ன செய்வது என்ற சிந்தனையில் அவளுடைய நடை தளர்ந்து காணப்பட்டது. விலைவாசிகளின் ஏற்றத்தால் அவதிப்படும் ஏழைகளுள் அவளும் ஒருத்தி.

கூவம் நதியின் இடக்குக் கரையை ஒட்டியிருந்தது அந்த ஓட்டு வீடு. ராபர்ட் கிளைவ் சென்னைக்கு வந்த போது அந்த வீட்டைக் கட்டியிருக்க வேண்டும். பத்திரிகைகளில் புயல் அறிவிப்பு வரும்தோறும் அந்த வீட்டில் குடியிருப்பவர்களுடைய வாயில், பல்லில் நீர் இருக்காது. சாவை நினைத்து ஒரே பயம் தான். மொத்தம் பன்னிரண்டு குடித்தனங்கள். மாரியம்மாள் மட்டும் எப்போதும் போல் அப்போதும் 'கருமாரி' என்று குரல் விடுத்துப் பாரத்தை அவள் தலை மேல் ஏற்றி இவள் வெறுமனே முடங்கிவிடுவாள். கணவன் ஏகாம்பரம் கூலி வேலை செய்பவன். விடிந்து சென்றால் இரவு ஒன்பது அல்லது பத்து மணிக்குத் திரும்புவான். இந்த லட்சணத்தில் ஐந்து குழந்தைகள். நான்கு பெண்கள். ஒரே ஓர் ஆண் பிள்ளை. நகராண்மைக் கழகப் பள்ளியில் மூவர் படித்துக் கொண்டிருந்தனர். பெரிய பெண்ணுக்குப் பதின்மூன்று வயது. வீட்டோடு வேலைகளைக் கவனிப்பாள். சில நாட்களில் தாயாருக்கு உடல்நிலை சரியாக இல்லாவிட்டால், அவள் வேலை பார்க்கும் இரண்டொரு வீடுகளுக்கு இவள் சென்று கவனித்து விட்டுத் திரும்புவாள். ஏதோ அரை வயிறும், முக்கால் வயிறுமாக நாட்கள் நகர்ந்தன. அந்த மட்டில் அவர்களைப் பட்டினியாகப் போடாமல் அந்தக் கருமாரியம்மன் காத்து வந்தாள். கருமாரியம்மன் பேரில் தான் மாரியம்மாளுக்கு எத்தனை பக்தி சிரத்தை ! விழித்தது முதல் உறங்குவது வரையில் எப்போதும் கருமாரியம்மன் சிந்தனை தான் ! சில நாட்களில் கணவனுடன் கூடத் திருவேற்காட்டுக்குச் சென்று திரும்புவாள்! நனவில் சென்று திரும்பத்தான் சாத்தியப்படவில்லையென்றும், கனவிலாவது நிறைவேறுகிறதே!

அந்த வீட்டின் அகல நீளமே எட்டடிக்கு ஆறடி தான். அதனுள்தான் அனைவரும் ஐக்கியம். ஓரிரு நாட்களை நீக்கி, ஏனைய நாட்களில் — அது புழுக்கக் காலமானாலும் சரி; குளிர் காலமானாலும் சரி — ஏகாம்பரம் தெருத் திண்ணையில் படுத்துக் கொள்வான். ஆயிற்று, ஏழாண்டுகள். அந்த வீட்டில்தான் காலம் தள்ள வேண்டியிருந்தது. பத்து ரூபாய் வாடகையில் இந்தக் காலத்தில் வீடு எங்கே கிடைக்கப் போகிறது?

காற்றடித்தால் விழுந்துவிடுவது போன்ற வீட்டை வைத்துக் கொண்டு, ஏக தடபுடல் படுத்துவாள் வீட்டுக்காரி அஞ்சலை. அவள் ஒரு விதவை. மாரியம்மாளைக் காலி செய்து விடும்படி பல முறை கூறியும், பேச்சு எடுபடவில்லை. வாடகை தவறாமல் கொடுத்து விடும் போது எதற்காகக் காலி செய்ய வேண்டும் ?

இந்தத் தகராறு இரண்டாண்டு காலமாகவே இருந்து வந்தது. வாய்ப் பேச்சு முற்றிக் கைகலக்கும் அளவுக்கும் இரண்டொரு முறை நடந்து விட்டது. ஏகாம்பரம் கொஞ்சம் வல்தாதுப் பேர்வழி. ஓரிரு நாட்களில் கள்ளச் சாராயம் குடித்து விட்டும் வருவான். அந்தச் சமயத்தில்தான் வாய்க்கு வந்தவாறு வீட்டுக்காரியைப் பேசிவிட்டான். வீட்டுக்காரி அவனை இலேசில் விட நினைத்தாளில்லை. தன்னை இரவோடு இரவாகச் சந்திக்க வரும் ஆத்மாவிடம் விஷயத்தை விளக்கி விட்டாள். ''நீ கவலைப் படாதே, அஞ்சலை! அவனை நான் விரட்டுகிறேன்!'' என்று சூள் கொட்டியவனும் மறுநாள் 'கோதா'வில் இறங்கி விட்டான்... கிடைத்தது சரியான உதைதான். ஏகாம்பரத்தின் வலுவை அன்றுதான் மாரியம்மாளும் உணர்ந்தாள். ஆனாலும் அவளுக்கு அந்தச் சண்டை பிடிக்கவில்லை. ''நீ இன்னாத்துக்குச் சண்டைக்குப் போறே! அவ பேசினா பேசிக்கிட்டுப் போகட்டும். கருமாரியாத்தா கவனிச்சுக்குவா !''

இதைத்தான் அவள் அடிக்கடி சொன்னாள்.

''ஆமாம்; மாரியாத்தா இந்தக் கயிச் சடைகிட்டே தான் இருக்காளா? மத்தவங்க கிட்டே அவளுக்கு விரோதமா, இன்னா? இந்தக் கசமாலத்துக்கு மாரியம்மா ஒரு கேடு!''

வீட்டுக்காரி அஞ்சலை எரிந்து விழுந்தாள். ஆனாலும் மாரியம்மாள் அமைதியாகவே சிரித்தாள். கருமாரியாத்தா.....!

இரண்டு தினங்களாகவே அஞ்சலையின் நெஞ்சம் எரிதழலுக்கு ஒப்பாகி யிருந்தது. எப்படிப் பார்த்தாலும் இவர்களைக் காலி செய்து விரட்ட முடியாது போயிருக்கிறதே என்று பொருமினாள். வீட்டில் குடியிருப்பவர்களைத் தூண்டி விட்டாள். பாவம், எல்லாமே அன்றாடம் காய்ச்சிகள்! ஏதோ குடிக்கூலி ஏறத்தாழத் தவறினால் ஒப்புக் கொள்வான் என்ற மன நிலையில் குடித்தனக்காரர்கள் மாரியம்மாளுக்கு எதிராகக் கங்கணம் கட்டிக் கொண்டு வலுச் சண்டை

யைக் குழாய் மூலமாகவும், முறைவாசல் மூலமாகவும் இழுத்தனர். இத்தனை நாட்களாக இல்லாத சண்டை இதுவென்று எழவே, மாரியம்மாளுக்குப் புரிந்து விட்டது. இனியும் குடியிருப்பது சரியில்லை என்று அவளுடைய நெஞ்சம் அறிவுறுத்தியது. ஆனாலும் வீடு கிடைப்பது அத்தனை சுலபமா?

இரவு பத்து மணிக்குக் கணவன் வேலையிலிருந்து வீடு திரும்பினான். வெந்நீரில் குளித்துவிட்டு, விபூதியைப் பூசிக் கொண்டு, தெய்வத்தை வணங்கியதும் சற்றே ஓய்வு கண்டான். பின்னி தயாராக வைக்கப்பெற்றிருந்தது. ஏகாம்பரம் வந்து அமர்ந்தான். சோற்றைப் போட்டுக் குழம்பை ஊற்றினாள். கருவாடு, மொச்சைக்கொட்டை, கத்திரிக்காய் மூன்றும் கலந்த அவர்களுக்கே உரித்தான ஒருவிதக் காரக் குழம்பு மணக்க மணக்க மூக்கைத் துருவியது. காரம் சற்று அதிகம். கண்களில் நீரை வரவழைத்து விட்டது. மூக்கை உறிஞ்சிக் கொண்டே உண்டு முடித்தான் ஏகாம்பரம். குழந்தைகளனைவரும் நல்ல தூக்கத்தில் ஆழ்ந்து கிடந்தனர். மல்லிகைப் பூ மணத்தது, அப்போதுதான் அவனுடைய மூக்குக்குத் தெரிய வந்தது. மனைவியை உற்றுக் கவனித்தான். அவனுக்குத் தெரிந்த அலங்காரத்துடன் அவள் காட்சி தந்தாள். அவன் சிரித்தான்; அவளும் சிரித்தாள். உள்ளே விருந்த போதையும், கருவாட்டுக் காரக் குழம்பும் சேர்ந்து மேலும் போதையூட்டின.

''மாரி ! படா ஜோராயிருக்கியே!''

ஏகாம்பரத்தின் கண்கள் செருகின. மாரியம்மாள் பதினறு வயதுக்கு இறங்கி விட்டவள் போலச் சிணுங்கிச் சிரித்தாள்.

''ஆ..... ஆ.... ஜோக்குத்தான் போ!''

''இது கிடக்கட்டும். முன்னாடி, ஒரு வீட்டைப் பாரு! இந்த வீடு நம்பளுக்குப் பளுவ்க்காது!''

''இன்னுமே.... மறுபடியும் கலாட்டாப் பண்ணுளா இந்த வூட்டுக்காரி!''

''வீட்டுக்காரியோட போகலே.... இப்ப இந்தக் கைக்கூலி குடித்தனக்காரிங்களும் இழுத்துக் கட்டிக் கிட்டுச் சண்டைக்கு வராளுங்க! அவங்களைச் சொல்லிக் குத்தமில்லே. அந்த வூட்டுக்காரி இப்படி ஏவுறு..!''

''சரி, சரி, கதையை விடு; காலையிலே பார்த்துக்குவோம் !''

**ம**று நாள் முதல் ஏகாம்பரத்திடமிருந்து கண்டிப்பான ஓர் உத்தரவு பிறந்தது. அது: மனைவி ஒருவர் வீட்டேறி முறை வாசல் செய்வதும், பத்துத் தேய்த்துப் பிழைப்பதும் பிடிக்கவில்லையாம். அதைவிட வீட்டோடு ஒரு படி அரிசி ஆட்டி, இட்டிலி தோசை சுட்டுப் பிழைக்கலாம் போல அவனுக்குத் தோன்றியது. தோன்றிய திட்டத்தை அமுலுக்குக் கொண்டு வரும்படியும் ஆணையிட்டான்.

முதலில் மாரியம்மாள் விழித்தாலும், கணவனுடைய அந்தத் திட்டம் உடல் நோகாமலிருக்கும் திட்டமாக இருக்கக் கண்டு ஏற்றாள்; செயல்படவும் முயன்றாள்.

நாளை கழித்து மறு நாள் வெள்ளிக்கிழமை. அன்று முதல் திட்டத்தை அமுலுக்குக் கொண்டு வர நினைத்தாள். அன்றே தான் வேலை செய்த வீடுகளுக்குச் சென்று சொச்சச் சம்பளக் காசை வாங்கி வந்தாள். ஒரு படி புழுங்கலரிசியும், அரை குண்டு விறகும், இருநூறு கிராம் கடலை எண்ணெயும் வந்து இறங்கி விட்டன. உளுத்தம் பருப்பு வீட்டிலிருந்தது. வாங்கத் தேவையில்லை. தெரிந்தவர்களிடமும், தெரியாதவர்களிடமும் கடையைப் பற்றிச் செய்தி பரப்பினாள். வீட்டுச் சொந்தக்காரியின் வயிறு பற்றி எரிந்தது. மாரிக்கு இப்படி ஒரு லாபமா? தன் வீட்டில் இது மாதிரி வியாபாரம் கூடாது என்று தடுத்து விடலாமாவென நினைத்தாள். அந்த நினைவு மறைந்தது; வேறு நினைவு எழுந்தது! இப்படிச் செய்து விட்டால் என்ன?

'தெய்வமே! எத்துணை பயங்கரமான எண்ணம் அது? பழிதீர்த்துக்கொள்ள இப்படியான அழிவு எண்ணம்தானு உதயமாக வேண்டும்?'

அந்த வீட்டு அத்தனை குடித்தனக்காரர்களுக்கும் ஒரே ஆட்டுரல்தான்! சில சமயங்



களில் அதற்கும் இல்லாத போட்டி ஏற்பட்டுவிடும். மெல்ல மெல்லத் தனியாக ஓர் ஆட்டுரல் வாங்கிக் கொண்டால் போகிறது என்று நினைக்கலானாள் மாரியம்மாள்! கருமாரியம்மன் கருணை புரிவாள்!

நாளைக் காலையில் வியாபாரத்தைத் தொடங்க வேண்டும். முதல் தோசை சுட்டு, கருமாரியம்மனுக்குப் படைத்துக் காக்கைகளுக்கு இடவேண்டும். பிறகு நல்ல கையால் 'போனி' செய்து வியாபாரத்தைத் தொடங்க வேண்டும். செலவுக்கும், வயிற்றுக்கும் போக நாளைக்கு ஒரு ரூபாய் மிச்சப்படுத்தினால் போதும். இரண்டு வருஷங்களில் தனியாக ஒரு குடிசை போட்டுக்கொண்டு ஆனந்தமாகக் காலத்தைக் கடத்தலாம்.

மாரியம்மாளுக்கு அப்போதே ஒரு சுற்றுப் பருத்துவிட்டது போன்ற உணர்வு தட்டியது. கணவனைப் பாராட்டிக் கொண்டாள். நல்ல இட்டம்! அருமையான யோசனை!

மாலை மணி நான்கு. ஊறவைத்த அரிசியை அரித்து, பிறகு மாவாக ஆட்ட உரலண்டை நாடிச் சென்றாள். உரல் காலியாகத்தான் இருந்தது. எவரும் போட்டிக்கு வரவில்லை. ஏன்? அந்தப் பக்கத்தில் ஆள் நடமாட்டமே இல்லையென்றுதான் சொல்ல வேண்டும்.

முதலில் உளுத்தம் பருப்பை ஆட்டி மாவாக்கி முடித்துக் கொண்டாள். பிறகு அரிசியைப் போட்டு ஆட்டினாள். உள்ளத்தில் தெம்பும், உணர்வில் கற்பனை முற்றுகைகளுமாகச் சேர்ந்து அவளை யந்திரமாக





## ஈயைக் கொன்று வருக்குப் பரிசு!



''மாகிமூரர் சங்கம்'' என்றால் என்ன தெரியுமா? ஈயைக் கொல்லும் சங்கம் என்று பெயர். பாகிஸ்தானில் ஈக்கள் தொல்லை அதிகமாக இருக்கின்றதாம். அதை ஒழிக்க இப்படியொரு சங்கம் ஏற்பாடு செய்திருக்கிறார்கள். இச்சங்கம் ஏராளமான ஈயைக் கொல்லுபவர்களுக்குப் பரிசளித்துவருகிறது. லாகூர் கல்லூரியைச் சேர்ந்த மாணவர் ஒருவர் 11,250 ஈக்களைக் கொன்று ஒரு பாலிதீன் பையில் போட்டுச் சங்கத்துக்குக் கொண்டு வந்தார். அவருக்கு ரூ. 2-50 பரிசு கிடைத்தது!

வேலை செய்ய வைத்தன. அரிசி மூக்காலும் மசிந்து விட்டது. மாடியின் வழியாக ஓர் அரக்கியைப் போல் பார்வையிட்டுக் கவனத்தைச் செலுத்தி வந்தாள் வீட்டுச் சொந்தக்காரியான அஞ்சலை. மாரியம்மாள் எழுந்து போக ஒரு சந்தர்ப்பம் கிடைக்குமா வென்பது அவளுடைய எதிர்பார்ப்பு! அந்தச் சந்தர்ப்பமும் எதிர்பாராமல் கிடைத்து விட்டது. பள்ளிக்கூடத்திலிருந்து திரும்பிய மக்களுள் மூன்றாவது பெண் 'கோ'வெனக் கதறிக் கொண்டே வீட்டுப் படியேறிக் கொண்டிருந்தாள். குழந்தைக்கு என்னமோ, ஏதோவென்று எண்ணி அரண்டு மருண்டு குழவிக் கல்லை அப்படியே விட்டுவிட்டு எழுந்தோடினாள் மாரியம்மாள். யாரோ ஒரு பையன் கல்லால் அடித்து விட்டான். மண்டையில் ரத்தம் வழிந்து கொண்டிருந்தது. அதை விசாரித்துக் கவனிக்கவே மாரியம்மாளுக்குச் சரியாக இருந்தது. இதற்குள் கிடைத்த சந்தர்ப்பத்தை நன்றாகவே பயன்படுத்திக் கொண்டாள் வீட்டுச் சொந்தக்காரியான அஞ்சலை.

நேற்றே ஏழெட்டுக் குவளைக் கொட்டைப் பருப்புகளைத் தூளாக்கித் தயாராக வைத்திருந்தாள். அதனை எடுத்து வந்து மாவுடன் கலந்து சற்றே ஆட்டிவிட்டுப் போய் விட்டாள். ''தொலைந்தாள் மாரியம்மாள்'' என்று கர்வத்துடன் முனகிக்கொண்டாள்.

பெண்ணின் மண்டையில் ரத்தம் வழிந்த இடத்தில் விரட்டித் தூளை அப்பிக் கட்டுக் கட்டிவிட்டு, அடித்த பையனை வசைமாரி பொழிந்தவளாய் உரலண்டை வந்து வேலையைக் கவனிக்கலானாள் மாரியம்மாள்.

மாடிக்குச் சென்ற அஞ்சலையின் மனம் எத்துணைத் துணிவாக இந்தக் காரியத்தைச் செய்துவிட்டோம் என்று நடுங்கியது. அந்த மாவில் சுட்ட பண்டத்தை உண்டதும் வாயிலும் வயிற்றிலும் போக்கெடுத்துப் பிணமாக்கிவிடுமே வேலைப்பருப்பு! பிறகு மாரியம்மாளைப் போலீஸ் தேடிக் கொண்டு வரும். கிடைக்கப் போகும் தண்டனை பயங்கரமானது! பிறகு அந்தக் கருமாரியம்மன்கூட அவளைக் காப்பாற்ற முடியாதே!

மன உளைச்சலும், உடல் நடுக்கமும் அஞ்சலையை வாட்டி வதைத்தன. அவளுக்கு இருப்புக் கொள்ளவில்லை. வீட்டைப் பூட்டிக் கொண்டு ஏதேனும் சினிமாப் பார்த்து விட்டு வரலாம் என்று மவுண்ட் ரோடை நோக்கி நடந்தாள். ஒருவேளை இரவே ஏதேனும் நடந்தாலும் தப்பிக்க வழி வருக்குமே?

சினிமாப்பார்த்துவிட்டு ஒன்பதரை மணிக்கு மேல் வீடு திரும்பிக் கொண்டிருந்தாள் அஞ்சலை. கூவம் நதிக் கரையோரமாக வந்து கொண்டிருந்தபோது வழியில் அணைக்கட்டு மாரியம்மன் கோயில் குறுக்கிட்டது. வழக்கமாக அங்கு நின்று கும்பிடு போடுபவள், இப்போது ஏனோ அரட்சி கண்டாள். கோயில் வாசற்படியண்டை வந்ததும் அவளுடைய கன்னத்தில் யாரோ பளார் என்று அறைந்தது போலிருந்தது. சே! வெறும் பிரமை! மேலே நடந்தாள்.

வெறிச்சோடிக் கிடந்த வீதியைக் கடந்து கொண்டிருந்தாள். ஆற்றோரமாகத் தூங்கிக் கொண்டிருந்த சொறி நாயொன்று முறைமைக்குக் குரல் கொடுத்தது. தொடர்ந்து இரண்டு வெற்று நாய்கள் குரைத்தன. அஞ்சலை அவற்றைச் சட்டை செய்யாதவளாய் நடந்து கொண்டிருந்தாள். மனத்தில் மெல்லிய கிலேசம். இரவே பிள்ளைகளுக்கு ஏதேனும் சுட்டுக் கொடுத்துக் களேபரம் நிகழ்ந்திருக்குமா?

தெருத் திண்ணையில் ஏகாம்பரம் படுத்துக் கொண்டிருந்தான். அன்று அவன் வெகு சீக்கிரமாகவே வீடு திரும்பி யிருக்கிறான். அவன் அமைதியாகத் திண்ணையில் படுத்துக் கொண்டிருந்ததிலிருந்து ஏதும் அசம்பாவிதம் அப்போதைக்கு நடைபெறவில்லை என்று எண்ணிப் பெருமூச்சு விட்டுக்கொண்டாள் அஞ்சலை.

வயிற்றிலும் கூட உணவு சரியாக இறங்கவில்லை. ஏதோ கடமைக்கு உண்டாள். பிறகு படுக்கையில் போய்ச் சாய்ந்தாள். தூக்கமா வரும்? உடல் இப்படியும் அப்படியுமாகப் புரண்டது. 'சே, சே! என்ன இருந்தாலும் இப்படி ஓர் அக்கிரமத்தைச் செய்திருக்கக்கூடாது' என்று மனம் இடித்துச் சொல்லிற்று. பழிவாங்க வேண்டுமானால் வேறு விதமாகப் பழி வாங்கி யிருக்கலாம்! இப்படி எமகாதக வேலை செய்திருக்கக் கூடாது!

அஞ்சலையின் மனம் அலைமோதி அலைமோதி அவளையே வழிக்குக் கொண்டு வந்து திருத்தியது. இந்த இரவு நேரத்தில் என்ன செய்ய முடியும்? வீடு முழுவதும் வெறும் கூலி ஆத்மாக்கள். அயர்ந்து மூலைக்கு ஒன்றாய் நீட்டிக் கொண்டு உறங்குகின்றன. இது



பனாமா
ப்ளேட்கள்
PANAMA
MADE IN INDIA
சுத்தமான
வழவழப்பான
ஷேவிங்குகளுக்கு
நாளுக்கு - நாள் சிக்கனம்

களைக் கடந்து பின்னங் கட்டுக்குச் சென்று அதுவும் இந்த நேரத்தில் ஆகாத ஒருத்தியை எழுப்பினாலும் மற்றவர்கள்தாம் என்ன நினைத் துக் கொள்வார்கள்!

கண்கள் கலங்கி விட்டன. அதுவரை ஒதுங்கி நின்ற கருமாரியம்மன் அப்போது தான் அவளுடைய நெஞ்சில் இடம் பெற் றாள். பாபக் கரங்கள் கூம்பின. ''கருமாரி யாத்தா! மன்னிச்சுக்கோடியம்மா, மன்னிச் சுக்கோ! தெரியாம இந்தக் காமாலம் தப்புப் பண்ணிட்டா! உன்னையே நம்பியிருக்கிற அந்த மாரியைக் கெடுக்க நெனைச்சேன். அதுக்காக நீ எனக்கு என்ன வேணுமானாலும் தண்டனையைக் கொடுக்கலாம். பாவம்! ஊர்ப் புள்ளைங்க வந்து அந்தத் தோசை, இட்டிலியைத் தின்னு அநியாயமாச் சாக விடாமக் கவலிச்சுக்கோடியம்மா, கருமாரி! இப்போ என்னாலே எதுவும் செய்ய முடியலே! நீ சக்தியுள்ளவளா யிருந்தாக் காப்பாத்து! நாளைக்கு வெள்ளிக் கிழமை. உன் சந்நிதிக்கு வந்து மன்னிப்புக் கேக்கறேன்.''

அஞ்சலையின் முனகலில் இப்படி ஓர் அலறல் பக்தியாகப் பிரவகித்தது. கடிகாரம் பன்னிரண்டு முறை அலறியது. மனத்தில் ஏற்பட்ட சாந்தியுடன் கண்களை மூடினாள்.

---

வெள்ளி புலர்ந்து வெகு நேரமாயிற்று. துள்ளி எழுந்த அஞ்சலை, பக்தியும், பயமுமாக முகத்தைக் கழுவிக் கொண்டு வெளியே வந்தாள். சூரியன் சரசரவென்று ஏறினான். என்ன நடந்ததோ ஏது நடந்ததோவென்று துடி துடிப்புடன் மாடிப் படிகளைத் தாவி இறங்கி வந்தாள். முதலில் தெரு வாசலுக்கே சென்றாள். யாரேனும் பிள்ளைகள் இட்டிலி தோசைக்காகத் தட்டேந்தி வருகின்றனரா என்று கவனித்தாள். ஒருவரும் வரவுமில்லை, வெளியே போகவுமில்லை. வெகு நேரம் காத்து மெல்ல உள்ளே வந்தாள். தெரு வாசல் வீட்டில் குடியிருக்கும் பூக்காரி பூஞ்சோலை மெல்லத் தலையை நீட்டினாள். ''என்ன வீட்டுக்காரம்மா! ஏன் ஒரு மாதிரியா இருக்கீங்க?''

அஞ்சலை என்ன பதில் சொல்வாள்? ஆயி னும் சொன்னாள். ''ஒண்ணுமில்லே, பூஞ் சோலை! வயித்தைப் பசிக்குது. யாரை யாவது விட்டு நாலு இட்டிலி வாங்கி வரச் சொல்லலாமேன்னு. ஆமாம். ஆமாம், அந்த மாரியாத்தா இட்டிலி 'போனி'யாயிடுச்சா? கடனு வாங்கலாம் பாரு...!''

பூஞ்சோலை கெக்கலி கொட்டிச் சிரித்தாள். ''நல்லாக் கேட்டீங்க போங்க! முதல் நாள் வியாபாரமே மூடிக் கவுத்துடுச்சி!''

''நீ என்னடி சொல்றே பூஞ்சோலே?''

''உங்களுக்குத் தெரியாதா? சரியாப் போச்சு! ராத்திரி கலக்கி வச்ச மாவுலே பல்லி விழுந்து செத்துக் கிடந்ததாம். பாவம்! அம்போன்னு தெருவுலே கொண் டாந்து அப்படியே மாவைக் கொட்டி யழுதா. பார்க்கப் பாவமா யிருந்துச்சு!''

இரவு அனைக்கட்டம்மன் கோயிலண்டை உண்டான பிரமை இப்போதும் ஏற்பட்டது அஞ்சலைக்கு! கன்னத்தைத் தடவி விட்டுக் கொண்டாள். அடுத்த தெருவிலே கிடந்த குப்பைத் தொட்டியை எட்டிப் பார்த்தாள். சேறுபோல் மாவு குழம்பிக் கிடந்தது. காணக் காணக் கண்களில் நீர் கரை தட்டிக் கொண்டே இருந்தது.

''தாயே! கருமாரியாத்தா!'' — அஞ்சலை யின் மனம் பெரிதாக அலறியது. நேரே அவள் விடுவிடுவென்று பின்கட்டை நாடிச் சென்றாள். தலையில் கையூன்றியவாறு அப் படியே அழுத கண்ணீருடன் அமர்ந்திருந் தாள் மாரியம்மாள்.

''மாரி! அழாதேடீ! எல்லாம் கேள்விப் பட்டேன். எல்லாம் நல்லதுக்குத்தான் கரு மாரியாத்தா இப்படிச் செய்திருக்கா! கவலைப்படாதே!''

யார்! வீட்டுக்காரியா? அவளா இப்படித் தன்னைத் தேற்றுகிறாள்? நம்ப முடியவில்லையே!

அஞ்சலை புரிந்து கொண்டாள். ''மாரி உன்னை நான் புரிஞ்சிக்கிட்டேன். நீ மகா உத்தமி! கருமாரி உனக்கு ஒரு குறையும் வைக்க மாட்டா! எல்லாத்தையும் பிறகு பேசிக்கலாம் வா, என்னோடு! நான் திரு வேலங்காட்டுக்குப் போறேன். நீயும் வா! துட்டு இல்லேன்னு பரவாயில்லே. நான் இட் டுக்கிட்டுப் போறேன். நாளையிலிருந்து கடை வை! வியாபாரம் எப்படியாவதுன்னு பாரு! முதல் போனி நானே பண்ணறேன். புறப் படுடீ!'' என்றாள்.

மாரி ஒன்றையும் பேசிக்கொள்ளவில்லை. திருதிருவென்று விழித்தவாறே ஒப்புதலைத் தெரிவிப்பவள் போல் தலையசைத்தாள். இரண்டொரு குடித்தனக்காரிகள் ஒன்றும் புரியாமல் தொலைவிலிருந்தவாறே வேடிக்கை பார்த்தார்கள். அவர்களைச் சட்டை செய்யா மல் மாடி நோக்கி நடந்து கொண்டிருந்தாள் அஞ்சலை. அவள் மாரியானாள்!

## பப்பாளி அல்வா!

கோவையில் ஏப்ரல் 2ம் தேதி தொடங்கிய பழ, காய்கறி கண்காட்சிப் போட்டியில் திரு ஜி. டி. நாயுடு அவர்கள் தாம் பப்பாளிப்பழத்தி லிருந்து தயாரித்த அல்வாவையும் வைத்திருந் தார். இதற்கு முதற் பரிசாக ஒரு வெள்ளிக் கோப்பை அவருக்கு வழங்கப்பட்டதாம்!

(சு. மி. ஏப்ரல் 5உ)





# ஓவியத்துக்கு ஒரு கவிதை




'இருக்கின்றேன்; இறக்கவில்லை' என்ற தமிழ்ப் பித்தனின் கவிதைக்கென்றே ஓவியம் தீட்டப்பெற்றதாகத் தோன்றியதே யொழிய, ஓவியத்துக்காக எழுதப்பட்ட கவிதையாக இருக்கவில்லை. இந்த உயிரோட்டமுள்ள கவிதையை இயற்றிய தமிழ்ப் பித்தன் அவர்களுக்கு என் வாழ்த்துக்களைத் தெரிவிப்பீர்களா?

11–4–66 க. ராமமூர்த்தி

சில்பியில், மணியம் அவர்களைப் பேட்டி கண்டு 'மாடர்ன் ஆர்ட்' குறித்து எழுதிய நல்ல கலைக் கட்டுரையைப் படித்த ஞாபகம். அதைத் தொடர்ந்து மணியத்தின் அட்டைப் படம் கண்ட பின் 'ஓவியத்துக்கு ஒரு கவிதை' 'மாடர்ன் . பொயத்ரி' வரிசையாக அனுப்பியுள்ளேன்.

## பாட்டுக் குஞ்சம்

கரிபிடித்த விளக்குடன்
கரிகுழலாள் படமும் பின்னணி
மேவிவர, சூழல் உருநோக்கி
தெருவிலே அமர்ந்து
கோடை இரவோரம் கால்நீட்டி
கோலக் கவிதைபெற
ஏங்கிநின்று
இதோ—
கவிதையென்றால்
ஆர் மறுப்பார்
ஆர்ட்! மணியம்!
மார்டன் ஆர்ட்டிஸ்ட்!
தென்னைமரம் பச்சையுடன்
சிவப்புநீலம் மஞ்சள் பழுப்பு..ஓ
பிரஷ் தீட்டிய
உள்ளதை உள்ளபடி
தீட்டும் மரபுப் பேனை
செஞ்சிற்றுடை கூடியவளைச்
சிறைபறக்கும் தென்றலின்
முயக்கில்
காதல்! நிலவு!
கடற்கரைப் படகு மிதப்பு
அலைத்தாவலில்
மன அலைக்கூட்டு
தழுவத் துடித்த கரங்களின்
நெளிசல்!
வான்கூரை ஓட்டை
வழிக் கசிந்த ஒளிச்சிதற
தென்னை கூட்டும் இருளில்
அந்தரங்கபோதம்
தவித்தார்! துடித்தார்!—
மார்டன் ஆர்ட்டோ?
நடப்பு? பிணைப்பு! செருகிய
புதை மனல் தழுவல்?
இல்லை கூட்டு பழைய
கூட்டுத்தான் —
கரிபிடித்த விளக்கோரம்
கவியாற்றுக் குழிமுயக்கில்
குடைபறக்க நான் எழுத...எழுத
கல்வி!
வேறென்ன வென்றிட்டுன்
புருக்கப்
போதும் இல்லை.
பெண்ணும் நிலவும்
ஆணும் தென்னங் கூட்டமும்
கடலும் மணலும்...
ஒன்றோ...
என்ன?
கவிதை!
வேண்டாவோ மார்டன்
பொயத்ரி!
தெரியுமே!
அது படத்தான்!
கூடும் புனலெழுச்சி
வரைந்துவிட்ட சதுர்!
ஆட்டம்—! அழுப்பு—!
அஞ்சலி—! அடக்கம்—!
பிரஷ் நுனியில் பெற்றெடுக்க
குழந்தை
கவிஞன் பேனா நுனியில்
பெற்றெடுத்த
அவசமா?
பிரஷ்!
பேனா?
கட்டினில் கும்பப்பிடி
சாம்பல்!
பாட்டுக் குஞ்சம்
வர்ணக் குழப்பமானால்
எழுத்துக் குழப்பமாமோ?—
கவியெழுதத் தன்னெடுத்தேன்
குரங்கானேன்—
பிய்த்து மாலை!
குரங்கென் செய்யும்
குரங்கு?
உதிர்ந்தது
பூ! பூ!

தஞ்சாவூர் இலக்கியன்


Edited printed & published by T. Sadasivam on behalf of Messrs. Bharathan Publications Private Ltd., at the Kalki Press, Kilpauk, Madras-10

## உங்கள் குழந்தையை ஆரோக்கியமுடன்
## குதூகலமாக வைத்திருக்க உறுதுணை

# உட்வர்ட்ஸ்

குடல் வலி, புளிப்பு, உப்புசம், பல்முளைப்புப் பருவக் கோளாறுகள் ஆகியவற்றிலிருந்து உடனடி நிவாரணம் தருவது உட்வாட்ஸ். எப்போதும் உட்வர்ட்ஸ் கிரைப் வாட்டர் உங்கள் வசம் இருக்கட்டும்.




100 ஆண்டுகளுக்கு மேலாக புத்திசாலித் தாய்மார்களால் உபயோகிக்கப் பட்டுவருகிறது.

LPE Aiyars, F. 10 TM

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon